

# ராஜாஜி உவமைகள்

சின்ன அண்ணாமலை தொகுத்தது

# ராஜாஜி உவமைகள்

சின்ன அண்ணாமலை
தொகுத்தது

தமிழ்ப் பண்ணை
தியாகராய நகர்-சென்னை 17

# ராஜாஜியின் ஆசி

ராஜாஜியின் ஆசி எனக்கு எப்போதும் உண்டு. 'அண்ணாமலை' என்ற பெயருடன் 'சின்ன' என்ற செல்லச் சொல்லைச் சேர்த்து 'சின்ன அண்ணாமலை' என்று தமிழ் மக்களுக்கு என்னை அறிமுகப்படுத்திவைத்தார். அந்த மகான் வைத்தபெயர் நிலைத்து விட்டது. குழந்தைக்கு பெயர் வைத்த தந்தை அறிவு புகட்டுவதும் இயற்கை. ராஜாஜியும் என்னைத் தான் செல்லும் இடங்களுக்கெல்லாம் கூட்டிப்போனார். உற்சாகம் கொடுத்தார். பாராட்டினார். போன இடங்களிலெல்லாம் சொற் பொழிவாற்றச் சொன்னார். குற்றங் குறைகளைச் சொல்லித் திருத்தினார். இப்படியாக என்னை ஒரு 'மனிதனாக' ஆக்கினார். ஏன் இப்படி எல்லாம்என்னிடம்அன்புபாராட்டினார் என்பது, அவர்சொல்லுவதுபோல ஈசன் ரகசியம்என்று தான் சொல்லத் தோன்றுகிறது.

உலகத்தின் அறிவுச் சுவைகளை எல்லாம் வடித்தெடுத்து அதற்கு 'ராஜாஜி' என்று பெயர் கொடுக்கலாம். அவர் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விட்டால் உவமைகள் அருவி நீர் போலக் கொட்ட ஆரம்பித்துவிடுகிறது. எங்கிருந்துதான் வருமோ? ஈசனே அறிவார்.

அந்த உவமைகளைமக்கள் எவ்வளவு அருமையாக அனுபவிக்கிறார்கள் என்பதையும் கண்டேன். ஆனால் இவ்வளவு அற்புதமான உவமைகள் காற்றோடு காற்றாகப் போய் விடுகிறதே என்ற ஏக்கம் மனதில் எழுந்தது.

ஆகையால் அன்றிலிருந்து ராஜாஜியின் பிரசங்கத்திற்குச் செல்லும் போது நோட்புத்தகமும் பென்சிலுமாகப் போய் உட்கார்ந்தேன். ஒவ்வொரு பிரசங்கத்திலும் எழுத முடிந்த அளவு உவமைகளை எழுதிக்கொண்டேன். சுருக்கெழுத்து தெரியாததினால் எத்தனையோ உவமைகள் காற்றோடு காற்றாகப் போய் விட்டது. பத்திரிகைகளிலோ விவரமாக வருவதில்லை. ஆயினும் கிடைத்த முத்தொள்ளாயிரம் பாட்டுகளைவைத்துகொண்டு நாம் மகிழ்ச்சி அடைவது போல கைவசமிருக்கும் உவமைகளை வைத்துக் கொண்டு மகிழ்ச்சியடைய வேண்டியதுதான்.

இந்தப் புத்தகத்தில் வெளிவந்திருக்கும் உவமைகளில் பல நானே நேரில் குறித்துக் கொண்டவை. மற்றவை தினபத்திரிகையிலிருந்தும், ராஜாஜியின் நூல்களிலிருந்தும் எடுத்தவை. இதில் அவர் கைப்பட எழுதிய உவமைகள் அநேகம் இருக்கிறது.

உவமைகள் சொல்லுவதில் திருவள்ளுவர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஏசுநாதர் உபநிஷத்து நான்கும் சேர்ந்த உருவமே ராஜாஜி.

அவரைப் பெற்றதில் தமிழ்நாடு எவ்வளவோ பெருமை அடைந்திருக்கிறது.

இந்நூல் வெளியிடுவதற்கு உதவியாக இருந்த தினப்பத்திரிகை யாளர்களுக்கும். புத்தகப் பிரசுராலயத்தார்களுக்கும், ஆங்கிலத்திலிருந்த சில உவமைகளை தமிழாக்கித் தந்த எனது நண்பர் இஸ்மத் பாஷா அவர்களுக்கும் நன்றி.

சின்ன அண்ணாமலை











சரிதானே! இனிமேல் நமஸ்காரம் ன்று சொல்ல மாட்டேன். வயதில் நான் பெரியவன் என்பதை நாளுக்கு நாள் அதிக மாக உணர்கிறேன்.



புஸ்தகத்தை எவ்வளவோ அக்கரையுடன் தயாரித்திருப்பீர்கள். நன்ருக இருக்கும் என்பதில் என்ன சந்தேகம்.

குயவனைத் தெரிந்த பின் சட்டியைப் பார்க்க வேண்டியதில்லை.

எது ஏதாயினும் உங்கள் பண்டம் என்ருல் தமிழ் நாட்டில் எல்லோரும் போட்டி போட்டுக் கொண்டு பிரியம் காட்டுவார்கள்.

உங்கள் புஸ்தகங்கள் அவ்வப்போது வந்து மேஜைமேல் மலர்க் குவியல் போல் அழகும் வாசனையும் வீசுவதும் சரி, திறந்து பார்த்தாலோ ஒப்பற்ற அன்பு மொழிகள் என் உள்ளத்தை தூக்கி வாரி எடுத்து அணைத்து வருவதும் சரி, சதா என் முன்னிலையில் இருக்கிறீர்கள்.

அன்பே உருவங்கொண்ட உங்களைப் போலத் தங்கள் புஸ்தகங்கள் அழகே உருவம் கொண்ட தோற்றமாக இருக்கின்றன.

உங்களுடைய அர்ப்பண மொழிகளை அதாவது எனக்காக எழுதிவரும் பலவர்ணக் கிளிஞ்சல் மின்னுவது போல், அன்பைப் பல நிறங்களுடன் பிரகாசிக்கச் செய்யும் சின்ன அண்ணுமலையின் அற்புத மொழிகளை ஒன்று திரட்டி ஒரு நூலாகவே போடலாம் போலிருக்கிறது. அதற்கு, 'பக்தியோகம்' என்று பெயரிட்டாலும் தகும்.

என் மீது அன்பு செலுத்தி என் சுவாசம் திக்கு முக்காகும்படிச் செய்துவரும் நண்பர்களை நான் எவ்வாறு போற்றுவது, நன்றி செலுத்துவது, ஆசி கூறுவது? தெரியவில்லை. அனைவரையும் சமாளிக்கலாம். தனிப் பண்பு

கொண்ட உங்களுடைய அன்புக்கு நான் என்ன சொல்லி என்ன செய்து தப்புவேன்? முடியாது. என்னைச் சிக்கெனப் பிடித்து விட்டீர்கள்.

இதற்கெல்லாம் காரணம் யாதென்று பார்த்தேன். ஒன்றும் தெரியவில்லை. ஈசன் ரகசியம்.

நான் இவ்விடம் இருப்பதில் நீங்கள் எல்லோரும் பெருமை அடைவதும் சந்தோஷப் படுவதுமே எனக்குப் போதும்.

எல்லாரையும் விசாரித்ததாகச் சொல்ல வேண்டும். இந்தத் தூது யார்மூலம் அனுப்பலாம்? உங்களையன்றி வேறு யார்மூலம் அனுப்பத்தகும்?

எல்லாருக்கும் பிரியமான அண்ணைமலைக்கு சந்தோஷமும் உற்சாகமும் என்றைக்கும் குறையாமலிருக்க வேண்டும் என்பது என் பிரார்த்தனை.



ட்லி தமிழ் நாட்டின் அருமையான தின்பண்டம்; நமக்குத்தான் அதன் ருசி தெரியும்; எவ்வளவு சட்னி, மிளகாய்ப்பொடி தொட்டுக்கொள்ள வேண்டும் என்றும் தெரியும். அதை ஒரு இங்கிலீஷ்காரனிடமோ, ஒரு வடக்கத்தியானிடமோ 'இது தமிழ் நாட்டின் அருமையான தின்பண்டம்' என்று சொல்லிக் கொடுத்தால், கொஞ்சம் தின்றுவிட்டு நாம் கொடுத்த மரியாதைக்காக 'ஓ வெரி நைஸ்' என்று சொல்லிவிட்டு நம் தலை மறைந்த பிறகு "இந்த இட்லியைப் போல் மோசமான வஸ்து இந்த உலகத்தில் இருக்கமுடியாது. இதைப்போய் தின்கிறானே மதராஸி" என்று சொல்லுவான். இட்லியின் ருசி அவனுக்கென்ன தெரியும்? அதைப்போலத்தான் பாரதியாரின் பாட்டுக்களும். அவை நமக்காகத்தான். அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க எவ்வளவோ பேர் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். மதராஸி அல்லாதவனிடம் இட்லி படும் பாட்டைப்போல் பாரதியாரின் கவிதைகள் படக்கூடாது என்று அவர்களை கேட்டுக் கொள்ளுகிறேன். மொழி பெயர்ப்பில் கவிதையின் வேகமும், உணர்ச்சியும் இருக்கு

மிடம் தெரியாமல் போய்விடும். ஆகையினால் தயவுசெய்து பாரதியின் பாட்டுக்களை ஆங்கிலப்படுத்த வேண்டாம்.

 2 

ரோஜாப் புஷ்பம் உயர்வானதா, மல்லிகைப் புஷ்பம் உயர்வானதா என்பது போன்ற வீண் விவாதங்களும் செய்யக் கூடாது. நமக்கு ரோஜா, மல்லிகை எல்லாம் வேண்டியதுதான். சிலர் குழந்தைகளைப் பார்த்து 'உனக்கு அப்பா வேண்டுமா? அம்மா வேண்டுமா?' என்று கேட்பதுண்டு. அப்படிக் கேட்கிறவர்களைக் கன்னத்தில் அறையலாம் என்று எனக்குத் தோன்றும். அதுபோலவே, கவிகளில் எந்தக் கவி உயர்ந்தவர் என்று விவாதிப்பதும் தவறு. 'கம்பர் உயர்ந்தவரா, பாரதி உயர்ந்தவரா' என்றெல்லாம் விவாதிக்கக்கூடாது. நமக்குக் கம்பரும் வேண்டும்; பாரதியும் வேண்டும். உண்மைக் கவி எது என்று தெரிந்துகொண்டு எல்லாவற்றையும் அனுபவிப்பதற்கு முயற்சிக்கவேண்டும்.

 3 

ரோஜாப் புஷ்பத்தின் வாசனையுள்ள திராவகத்தை ஒரு புட்டியில் போட்டு

விற்கிறார்கள். வாசனை அப்படியேதானிருக்கிறது. ஆனால், அது ரோஜாப் பூ ஆகுமா? மலரை நாம் பார்த்து முகர்ந்து அனுபவிக்கிற சந்தோஷம் புட்டியில் அடைத்த திராவகத்தினால் ஏற்படுமா? கருத்துமட்டும் நன்றாயிருந்தால் அது வெறும் வாசனைத் திராவகம் மாதிரி. நல்ல கவிதை உருவம் அதற்கிருந்தால் ரோஜாப் புஷ்பம் மாதிரி. கவிதையும் ரோஜாப் புஷ்பத்தைப்போல முழுமையாகப் பார்த்து அனுபவிக்கவேண்டும். இதழ் இதழாகப் பிய்த்து நாசம் செய்யக்கூடாது.

 4 

மகாத்மாவின் இளைய சகோதரர் என்று என்னைப்பற்றி நாகபுரி மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவர் சொன்னார். மூத்தவரின் சொத்தை இளையவன் பெறுவதில்லை என்பது உங்களுக்கெல்லாம் தெரியும். தந்தையின் சொத்து தனயனுக்குத்தான் கிடைக்கிறது. எல்லாக் காங்கிரஸ் ஊழியர்களும் காந்திஜீயின் புத்திரர்கள்தான். ஆகவே அவரது மகத்தான கொள்கைகளைப் பிதிரார்ஜிதமாப் பெற்றுக் காப்பாற்றவேண்டிய உரிமை உள்ளவர்கள் காங்கிரஸ் ஊழியர்களே.

 5 

தான் ஒதுக்கி வைத்திருந்த தான்ய வித்துக்களை நல்ல விவசாயி சாப்பாட்டுக்கு உபயோகப்படுத்திவிடமாட்டான். அப்படி அவன் செய்தால் புதிய சாகுபடிக்கு அவனிடம் ஒன்றும் இருக்காது. இந்தியா வுக்கு இப்போதுதான் சுதந்திரம் கிடைத் திருக்கிறது. இந்த சுதந்திரம் வித்துக்களைப் போன்றது. ஆகையால் நாம் ஜாக்கிரதை யாகப் பயன்படுத்தவேண்டும். சுதந்திர வித்து நன்கு முளைவிட்டு, பயிராகி, செழித்து, பூத்துக் காய்த்து இனிய கனிகளை வழங்கும் படி நாம் பார்த்துக்கொள்ளவேண்டும்.

 6 

சொந்த லாபம் இல்லாமல் பொதுநல உணர்ச்சியோடு செய்கின்ற காரியத்துக்கு அதிக கவனம் இருக்காது என்று சிலர் சொல்லுகிறார்கள், இது தவறு. உதாரண மாக, சொந்தத்துக்கும் வீடு கட்டுகிறோம். பொது உபயோகத்துக்கும் கோவில் கட்டு கிறோம். இவை இரண்டையும் கட்டுகிற சிற்பிகளும் வேலைக்காரர்களும் ஊதியத் தைக் கருதி கட்டினாலுங்கூட பொதுஜன

நன்மையைக் கருதிக் கட்டும் கோவிலைத்தான் அதிக கவனமாகக் கட்டுகிறார்கள் என்பது தெரியவரும்.

 7 

பொது மக்களாகிய குழந்தைகளுக்கு காங்கிரஸ் தாய் போன்றது. குழந்தையின தேவையை அறிந்து தாய் வேண்டுவன செய்வாள். பொதுமக்களின் தேவையைத் தெரிந்து காங்கிரசும் வேண்டுவன செய்யும். குழந்தையின் க்ஷேமத்தைக் கருதி சில சமயம் தாய் அடிப்பாள். பொதுஜனங்களின் க்ஷேமத்தைக் கருதி காங்கிரஸ் சர்க்கார் சில வரிகளை விதிக்கிறது. குழந்தையைத் தாயார் அடித்தாலும் குழந்தை தாயாரின் காலையே கட்டிக்கொண்டு அழும். அதுபோல் காங்கிரஸ் சிறிது கஷ்டத்தைக் கொடுத்தாலும் பொதுஜனங்கள் காங்கிரசை விடமாட்டார்கள். தாயிடம் குழந்தை கோபித்து தாயை விட்டுவிட்டால் குழந்தைக்கும் நஷ்டம். தாய்க்கும் மனக் கஷ்டம். அம்மாதிரிதான் பொதுஜனங்கள் காங்கிரசை விட்டால் அவர்களுக்கும் நஷ்டம். காங்கிரசுக்கும் கஷ்டம்.

 8 

ரொம்ப கெட்டிக்காரர் ஒருவருக்கு பதவி கிடைக்குமுன்பு பெருமை கொடுக்காமல், பதவி கிடைத்தபின் அவருக்கு மதிப்புக் கொடுப்பது எப்படி என்றால், ஒருவன் தன் தாயாரை, தன்னைப் பெற்றவள் என்பதற்காகக் கௌரவம் கொடுக்காமல், அவள் லேடீஸ் கிளப் பிரஸிடெண்டானவுடன் அவளுக்கு மதிப்புச் செலுத்துவது போலாகும்.

 9 

நான் சென்னையில் உத்தியோகம் பார்ப்பது நம்ம ஊர் வாழை இலையில் ரசமும் சாதமும் போட்டு கையால் பிசைந்து ருசித்துச் சாப்பிடுவதுபோலாகும். ஆனால் வடக்கே சென்று உத்தியோகம் பார்ப்பது மேஜையின் மீது பிளேட்டுகளை வைத்து அதில் வெண்ணெ—ரொட்டி முதலியவைகளைப் பறிமாறி, கைக்கும் ஆகாரத்துக்கும் சம்பந்தமில்லாமல் கரண்டி முதலான ஆயுதங்களைக் கொண்டு சாப்பிடுவது போலாகும். அதாவது சென்னையில் வேலை பார்த்தால் எந்தக் காரியத்தையும் நான் நேரில் பார்த்து அறிந்து திருப்தியாகச் செய்யமுடியும். வடக்கே உத்தியோகம் பார்த்தால் காரியத்துக்கும் எனக்கும்

சம்மந்தமில்லாமல் வெறும் உத்திரவுகள் போடுவதோடு சரி.

## 10

தொழிலாளர்கள் தங்கள் குறைகளை அஹிம்ஸா தர்மப்படி, சட்ட ரீதியான வழிகளில் நிவர்த்தி செய்து கொள்ளவே தொழிற்சங்கங்களை அமைக்க வேண்டும். வேலை நிறுத்தம் செய்வதற்கு மட்டும்தான் சங்கம் என்று நினைப்பது தவறு. இதனால் வேலை நிறுத்தமே செய்யவேண்டாம் என்பதல்ல. ரொம்பவும் அவசியம் நேர்ந்த போது நியாயமாகச் செய்யலாம். ஒரு மனைவி தனது கணவனுடன் எப்பொழுதாவது சண்டை போட்டுக்கொண்டு, சாப்பிட முடியாதென ஒருநாளைக்குச் சொல்லலாம். ஆனால் சண்டை போட்டுக்கொண்டிருக்கவே கலியாணம் செய்துகொண்டாள் என்று சொல்லுவது தவறு. கணவனும் மனைவியும் சேர்ந்தே குடும்பத்தை நடத்தவேண்டும்.

## 11

ஹிந்துஸ்தானி ஒரு சைக்கிள் வண்டி போல. வீட்டைவிட்டு வெளியே போய்

காரியம் பார்ப்பதற்கு அது உபயோகப்படும். புதிதாக சைக்கிள் வாங்கிக்கொடுத்தவுடன் நம்முடைய குழந்தைகள் புதிய மோகத்தில் வீட்டுக்குள்ளும் ஓட்டுவார்கள். அதைக் கண்டு நாம் மிரண்டுவிடக்கூடாது. நாளாக நாளாக தேவைப்படும்போதுதான் அவர்கள் சைக்கிளைத் தொடுவார்கள். இது இயற்கை. இதைப் போலவே ஹிந்துஸ்தானியைக் கற்றுக் கொள்ளும் குழந்தைகள் சில சமயங்களில் வீட்டிற்குள்ளும் பேசத் தொடங்குவார்கள். அதைக் கண்டு பெற்றோர்கள் மிரண்டுவிடக் கூடாது. சிறிது காலத்திற்குப் பிறகு தேவையான சமயத்தில் வீட்டுக்கு வெளியே ஹிந்துஸ்தானியை உபயோகிப்பார்கள் என்பதை உணர்ந்துகொள்ளவேண்டும்.

 12 

ஹிந்துஸ்தானியை படிப்பதனால் தமிழுக்கு ஆபத்து என்று சிலர் கூச்சல் போடுகிறார்கள். தமிழ்த் தாய்க்கு ஹிந்துஸ்தானியை ஒரு வேலைக்காரியாகவே நியமித்திருக்கிறேன். எஜமானியின் உத்திரவுக்கிணங்கித்தான் வேலைக்காரி நடப்பாள்.

வேண்டுமானால் வைத்துக்கொள்ளவும் வேண்டாதபோது நீக்கிவிடவும் உள்ள அதிகாரம் எஜமானிக்கு எப்போதும் உண்டு. ஆகையால் யாரும் பயப்படவேண்டிய அவசியமில்லை.

 13 

நெருப்பு ஒரு வீட்டைக் கொளுத்தவும் உதவும், சமையல் செய்து சாப்பிடவும் உதவும். அதைப்போல விற்பனை வரி என்பது தங்கள் வீட்டைக் கொளுத்தவந்த நெருப்போ என்று முதலில் பயந்த வியாபாரிகள், பிறகு தங்கள் வீட்டுச் சமையலுக்காகவே வந்த நெருப்பு என்பதைத் தெரிந்து கொண்டுவிட்டார்கள்.

 14 

நம்முடைய நண்பர்களே நம் மீது கோபப்பட்டு எதிர்ப்பை அதிகம் உண்டாக்குகிறார்கள் என்று நாமும் அதற்காக கோபம் கொண்டுவிடக்கூடாது. தீப் பிடித்துவிட்டால் பிறகு ஜோராகத்தான் எரியும். ஆனால் தீ அவிந்து போனவுடன் தீயினால் உண்டான சாம்பலை நாம் நெற்றியில் விபூதியாக இட்டுக்கொள்ளுகிறோம். அதைப் போல கோபம் தணிந்ததற்குப் பிறகு நம்மை

எதிர்த்தவர்களை, நம் இஷ்டப்படி நல்ல காரியங்களுக்கு உபயோகப்படுத்திக் கொள்ள முடியும்.

 15 

தவறுகள் என்பது குப்பையைப் போன்றது. குப்பையை வயலுக்கு உரமாகப் போட்டால் பயிர் செழிப்படையும். அதைப் போல நம்முடைய தவறுகளையே நல்ல காரியங்களுக்கு உரமாகப் போட்டால் வெற்றியடைவோம்.

 16 

ஒருவருக்கு உள்ளத்தில் ஒரு ஸ்தானம் உண்மையோடு கொடுத்து விட்டால் அந்த ஸ்தானத்திலிருந்து அவரை அகற்றிவிட்டு அந்த இடத்தில் வேறொருவரை வைப்பது என்பது இயலாத காரியம். மாதுளம்பழத்தை உடைத்தால் அதிலிருந்து சில முத்துக்கள் கீழே உதிரும். முத்துக்கள் உதிர்ந்தவுடன் அந்த முத்துக்கள் இருந்த இடம் குழிகுழி யாக இருக்கும். உதிர்ந்த முத்துக்களில் ஒன்றை எடுத்து ஏதாவது ஒரு குழியில் வைத்தால் பொருந்தாது, அந்தந்தக் குழியில் அந்தந்த முத்துக்களையே வைத்தால் தான் பொருந்தும்.

 17 

உடலும் உயிரும் வெவ்வேருக இருக்க முடியாது. அது போலவே தேசபக்தியும் தலைவர்களைப் பூஜித்தலும் ஒன்றேயன்றி வேறில்லை. தேசத் தலைவர்களிடம் பக்திப் பரவசம் கொள்ளாத தேசபக்தி வெறும் உயிரற்ற பிரேதமேயாகும்.

 18 

பந்துக்குக் காற்று எப்படி அவசியமோ, அப்படி காங்கிரஸிற்கு மகாத்மா காந்தி அவசியமாகும். அவரில்லாத காங்கிரஸ் காற்றில்லாத பந்துபோல இருக்கும்.

 19 

ஹிந்துக்களும் முஸ்லீம்களும் ஓர் கோபுரம்போல் ஒன்ருய் இருந்து கௌரவமாகவும் கம்பீரமாகவும் இருக்கலாம். இரு சமூகமும் பிளவுபட்டால் கோபுரம் பிளவு பட்டதுபோல இருக்கும். முஸ்லீம்கள் பயப்படுவது, விடியற்கால இருட்டைக் கண்டு, இருட்டு நீடித்து இருப்பதாக நினைப்பது போன்றதுதான்.

 20 

டோல் கேட்டு மாதிரி கள்ளுக்கடை இருந்தது. மழைபோல சர்க்காருக்குப் பண மும் வந்துகொண்டிருந்தது. ஆனால், கூடவே தரித்திரமும் விருத்தியாகி வந்தது. கள்ளுக் கடைகளை எடுத்தால்தான் தரித்திரம் ஒழியும். சிரங்குள்ள குழந்தைகள் உப்பில் லாப் பத்தியம் இருக்கக் கஷ்டப்படுவது போல, முதலில் கள்ளை விட்டிருப்பது கஷ்ட மாய்த்தான் இருக்கும். ஆனால் பின்னால் வரவர நல்ல சுகமேற்படும்.

 21 

வியாதியைச் சரியாக அறிந்துகொள்ளக் கூடிய டாக்டரைக் கண்டு பிடிப்பதுபோல, காந்திஜியை சரியான டாக்டர் என்று தேர்ந் தெடுத்து விட்டோம். வியாதி சீக்கிரம் குண மாகவில்லையே என்று, வேறு டாக்டரை தேர்ந்தெடுக்கக் கூடாது. வியாதி வந்தால் போவதற்கு நாளாகும். மலைமேல் ஏறினால் வழி முழுதும் இறங்கித்தானே ஆக வேண் டும். வியாதிக்கு பத்தியம் இருப்பதுபோல, கள் குடிப்பதை விட்டு, பொய், மோசம், கலகம் செய்யாமல் இருக்க வேண்டும்.

## 22

புதுத்துணியிலும் அதன் சாயத்திலும் ஜனங்களுக்குப் புது மோகம் ஏற்படுவது போல், புதுக்கட்சிகளையும், புதுப்பேச்சுக்களையும் பார்க்கும் போது மோகம் உண்டாவது இயற்கை. புதுத்துணியில் சாயம் போய் விட்டதும் ஆசை தீர்ந்து விடும். அதுபோல், உண்மை வெளியானதும் ஆசை நிராசையாகிவிடும்.

 
## 23


இந்த தேசத்தில் பல மதங்கள் இருந்தாலும், அவை ஓர் நந்தவனத்தில் உள்ள பலவித புஷ்பங்களைப் போல் இருக்க வேண்டும். அழகிய ரோஜாவில் முள் இருப்பது போல், நம் மதத்திலும் சில குறைகள் இருக்கின்றன. புஷ்பத்திலுள்ள முட்கள் இயற்கையானவை. ஆனால் மதத்திலுள்ள குறைகளோ செயற்கையானவை தான்.


## 24


ஹிந்து முஸ்லீம் பிரச்னை என்பது ஒரு வியாதி. அந்நோய் தீரக் காங்கிரஸிடம் தான் மருந்து இருக்கிறது.

 25 

முஸ்லீம்களுக்கு பொதுத் தொகுதி இருந்தால் அவர்களுக்கு ஜாஸ்தியான செல்வாக்கு ஏற்பட்டிருக்கும். இம்மாதிரியான நிலைமை ஏற்படும்படி செய்ததற்கு அவர்கள் தான் ஜவாப்தாரி. தனித் தொகுதி ஏற்படுத்தி விட்டு எல்லாக் கக்ஷிகளையும் ஒரு பெட்டிக்குள் கரடி, பூனை, சிங்கம், எல்லாவற்றையும் அடைப்பதுபோல் சேர்த்து அரசியல் நடத்துவோம் என்றால் எப்படி முடியும்? அது முடியவே முடியாது. அம்மாதிரி நடத்தினால் ஒழுங்கு முறை என்பது இருக்காது, அரசியல் ஒழுங்காகவும் வெற்றிகரமாகவும் நடக்காது,

 26 

எப்படி ஒரு வர்ணத்திற்கும் மற்றொரு வர்ணத்திற்கும் விரோதம் கிடையாதோ அதேபோல் ஹிந்து நாகரீகத்துக்கும் முஸ்லீம் நாகரீகத்துக்கும் விரோதம் கிடையாது. புஷ்பங்களைப்போல், நாகரீகங்களும் கலைகளும் ஒன்றுக்கொன்று சேரும் பக்ஷத்தில் உயர்ந்த பலன் அளிக்குமே தவிர விரோதங்களை உண்டாக்காது.

 27 

வயிற்றில் உள்ள கோளாறுகளை எப்படி தலைவலி மருந்து சொஸ்தப் படுத்தாதோ அதேபோல் ஹிந்து-முஸ்லீம் பிரச்னை, காங்கிரஸ்பேரில் அபாண்டமான புகார்களைக் கூறுவதால் நிவர்த்தி யாகாது. அடிப்படையான காரணங்களைக் கண்டு பிடித்து நிவர்த்தி செய்ய வேண்டும்.

 28 

தியாகம் செய்கின்றவர்களைப் பட்டம் பதவிகள் என்ற மேனகை வந்து விஸ்வாமித்திரரை மயக்கியது போல மயக்கலாம். ஆனால் தவம் கெடாமல் இருக்க திட சித்தம் வேண்டும்.

 29 

மிகவும் சந்தோஷமாகக் கலியாணம் நடக்கும் போது எதிர் காலத்தைப் பற்றிய குடும்ப பாரத்தைப் பற்றி விசாரப் படுவது போல, சுதந்திரம் வந்த சந்தோஷத்தில் எதிர் கால நிர்வாகம் பற்றிய விசாரமும் நமக்கு ஏற்பட்டுள்ளது.

30

சர்க்கார் உக்யோகஸ்தர்களை மிரட்டி உருட்டி வேலை வாங்கக்கூடாது. ஆடிக் கறக்க வேண்டிய மாட்டை ஆடிக்கறக்க வேண்டும். பாடிக்கறக்க வேண்டிய மாட்டைப் பாடிக்கறக்க வேண்டும். அதைப் போல உத்யோகஸ்தர்களிடம் நல்ல வார்த்தை பேசி சேவையைப் பெறவேண்டும்.

 31 

தகப்பனார் ஒருவர் திடீரென இறந்து போகிறார் என்று வைத்துக் கொள்ளுவோம். உடனே அவரது மைனர் குமாரன் தகப்பனார் இறந்து விட்டதனால் திடீரென மேஜராகி விடுவதில்லை. இது போலவே பிரிட்டிஷ் ஆதிபத்ய அதிகாரம் செத்து விட்டதனால் சமஸ்தானங்கள் இந்தியாவிலிருந்துபிரிந்தோ அல்லது இந்தியாவின் மத்தியில் ஒரு தனி ராஜாங்க அந்தஸ்துள்ள சுதந்திர நாடாகவோ ஆகிவிட முடியாது.

 32 

கள்ளுக்கடையை மறியல் செய்யச் சொன்ன நீங்கள் கோர்ட்டுக்குப் பேர்கும்

வக்கீல்களை ஏன் மறியல் செய்யச் சொல்லக் கூடாதென்று கேட்கிறார்கள். கள்ளுக்கடைக் குப் போகிறவனை மறித்துக் குடிக்காதே என்று சொல்லி அவனைத்திருப்பினால் அவனுக்கு காசுமிச்சம். பெண்டு பிள்ளைகளுக்கு சோறு கிடைக்கும். அதே போல் கோர்ட்டுக் குப் போகும்வக்கீலை மறித்துத்திருப்பினாலோ வக்கீலுக்குப் பீஸ் வந்துவிடும், கக்ஷிக்கார ருக்கு கேஸ் கோவிந்தாவாகப் போய்விடும். ஆகையால் எதை எதற்கு உபயோகிக்க லாமோ அதை அதற்குத்தான் உபயோகிக்க வேண்டும். எல்லா வியாதிக்கும் ஒரே மருந்தா? தலைவலி மருந்து கண்வலிக்குப் பயன்படுமா?

 33 

வாழை மரத்தில் பெரும் இலைகள், வளரும் குருத்துக்கு மேலும் நன்றாக வளர நிழல் கொடுக்கிறது. மாடுகள் குருத்துகளை கடித்துத் தின்று விடாமல் பெரிய இலைகள் தங்களையே தியாகம் செய்து காப்பாற்றுகின்றன. ஆகவே, இளம் குருத்துகள் வளர்ச்சிக் குப் பெரிய இலைகள் தடையாயிருக்குமோ என்று நாம் எண்ணுவது தவறு. அதைப் போல, இளைஞர்கள் வளர்ச்சிக்குப் பெரிய வர்கள் தடையாக இருப்பார்களோ என்று எண்ணுவதும் தவறு.

 34 

சொந்த சகோதரியிடம் எப்படி பகைமை பாராட்டக் கூடாதோ, அப்படி சகோதர பாஷைகளிடமும் பகைமை பாராட்டக்கூடாது. தங்கை, அக்காவை ஆசையுடன் வரவேற்பது போல, தெலுங்கு, ஹிந்துஸ்தானி போன்ற மொழிகளையும் வரவேற்கவேண்டும்.

 35 

வேலை நிறுத்தத்தால் லாபத்திற்குப் பதில் நஷ்டமே உண்டாகிறது. யார் பேச்சையோ கேட்டுத் திடீரென்று வேலை நிறுத்தம் செய்தால், குடிகாரன் வீட்டுக் குடும்பத்தார் பட்டினி கிடப்பது போல கிடக்க நேரிடும்.

 36 

சர்க்கார் என்பது வெறும் விளையாட்டே என்று சொல்லத் தோன்றுகிறது. தம்முடைய விளையாட்டுச் சாமான் களைப்பற்றி சிலசமயம் குழந்தைகள் சண்டையிட்டுக் கொள்ளுகின்றன. இதேபோல நம்முடைய சர்க்காரைப் பொறுத்தும் நாம் தகராறு செய்கிறோம்.

சுதந்திர தேசத்தில் வரி என்பது நாளாக நாளாக குடும்ப பட்ஜட்டின் ஒரு பகுதியாய்விடும். குடும்ப விவகாரங்களுக்கும் அரசாங்க விவகாரங்களுக்கும் இடையே உள்ள வேற்றுமைகள் நாளுக்கு நாள் குறைந்து போய்விடும். உதாரணமாக, அரசாங்கம், ஒரு ஜோரான டாக்ஸியை அல்லது பஸ்ஸை வாடகைக்கு விடுகிறது என்றால், ஒருவன் தனக்காக ஒரு தனிக்கார் வைத்துக் கொண்டு காசு செலவு செய்ய அவசியமில்லை. வசதி செய்து கொடுக்கும் அரசாங்கத்துக்கு ஏதோ கொஞ்சம் வரி கொடுப்பதற்காகவும் வருத்தப்பட வேண்டியதில்லை. அதேபோல, ஒருவன் தன் குழந்தைகளுக்கு அழகான பொம்மைகளை வாங்கிக் கொடுக்க விரும்புகிறான். அந்தக் குழந்தைகள் சுலபமாக விளையாட வசதியாக பெரிய பார்க்குகளை சர்க்கார் நிர்மாணித்துக் கொடுக்கிறது. இப்படி வசதிசெய்து கொடுப்பதற்காக அரசாங்கம் வரி விதிக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்தவரியை குடும்பச் செலவுகளில், ஒன்றாகக் கருதிச் செலுத்தவேண்டும்.

 38 

'வாரத்தில் ஒரு நாள் மதுவை நிறுத்தினால் போதும். அவ்விதம் செய்யாமல் ஏன் பூரண மதுவிலக்கு செய்கிறீர்கள்,' என்று சிலர் கேட்கிறார்கள். அவர்களுக்குச் சொல்லுகிறேன். ஞாயிற்றுக்கிழமை மட்டும் மதுவை நிறுத்தினால் குடிகாரர்கள் திங்கட்கிழமை ஒன்றுக்கு இரண்டு மடங்காகக்குடிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. உதாரணமாக நம் ஜனங்கள் ஏகாதசி விரதம் அனுஷ்டித்து வருகிறார்கள். ஆனால்அதைவிடச் சிறப்பாக துவாதசி விரதம் அனுஷ்டிக்கப் படுகிறது என்பது நமக்குத் தெரியும். ஏகாதசியன்று ஜனங்கள் பட்டினி விரதமாக இருப்பதால், துவாதசியன்று நிறைய உணவை உட்கொள்ளுவதற்கு ஏற்றவாறு வயிறு காலியாக இருக்கிறது. இதைப்போல் ஞாயிற்றுக்கிழமை மட்டும் மதுவை நிறுத்தினால் திங்கட் கிழமை அதிகம் குடிப்பார்கள்.

 39 

இறந்த கால சம்பவங்களையும், திட்டங்களையும் திரும்பவும் நிகழ்காலத்துடன் பொறுத்த முயற்சிப்பதால் ஒருபயனுமில்லை.

ஏனெனில், ஒரு புதிய இயந்திரத்தைக் கோர்ப்பதற்கு தேய்ந்து போன, கைகள் பல்மாறிய பல பழைய பகுதிகளைச் சேக ரித்து இணைப்பதற்குச் செய்யப்படும் வீண் முயற்சியாகும். அதைவிட மோசம், அது மனித விவகாரங்களில் அனுஷ்டிக்கப்பட் டால், இயந்திர நுணுக்கங்களைவிட அதிக நுணுக்கம் வாய்ந்தவை அது. புதிய மறையில் பழைய ஸ்குரூஆணியைத் திருக, அல்லது பழைய ஸிலிண்டரில் புதிய பிஸ்ட்டனைப் பொருத்த முயற்சிப்பது போலாகும். இவை யெல்லாம் வேலை செய்யாது.

 40 

பட்ஜட் தயாரிப்பது என்பது தையற் காரனுடைய தொழில்போல் ஆகும். தையற் காரன் தன்கையிலுள்ள துணியின் அள வுக்கு ஏற்றவாறே கோட் தைப்பான். தையற்காரன் கேட்கிற அளவு துணியை கொடுக்காமல் கொடுத்த அளவைக் காட் டிலும் பெரிய கோட் வேண்டுமென்று அவ னிடம் கேட்பதில் பயனில்லை. நான் ஒரு சாமான்ய தையற்காரன். கிடைக்கிற வருமா னத்திற்கு ஏற்றவாறு செலவை வகுக்கத் தான் எனக்குத் தெரியும்.

 41 

மக்களின் கடமைகளைக் குறிக்கும் சின்னமாக மகாராஜா விளங்குகிறார். மகாராஜா மூலமாக நீங்கள் தேசபக்தியை வெளிப்படுத்தலாம். விக்ரகத்தை அலட்சியப் படுத்திவிட்டுக் கடவுளைக்காண முடியுமா?

 42 

நெற் பயிர்போல், மனிதர்கள் வளர்ந்து முதிர்ந்து அறுபடுகிறார்கள்.

43

நெருப்பில் புகை இருப்பது போல், உலகத்தில் செய்யக் கூடிய எல்லாத் தொழிலிலும்தான் குற்றம் தோன்றும்.

44

டாக்டர் எழுதிக் கொடுக்கும் மருந்தைதான் கம்பவுண்டர் நோயாளிகளுக்கு கொடுக்க வேண்டும். அப்படி இல்லாமல் கம்பவுண்டர் தன் இஷ்டப்படியே மருந்து கொடுக்க முற்பட்டால் நோயாளி பிழைக்க மாட்டார். அதைப்போல, தலைவர்கள் சொல்வதைத்தான் தொண்டர்கள் கேட்கவேண்டும் அப்படியில்லாமல் தொண்டர்களே தங்கள் இஷ்டப்படி காரியங்களைச் செய்ய ஆரம்பித்தால் தேசம் சீர்குலைந்துவிடும்.

 45 

ஒரு சர்க்காரின் நிர்வாக விஷயங்களில் பொது ஜனங்கள் தலையிடக்கூடாது. என்னுடைய நண்பர்களே சிலர் நான் சென்னை சர்க்காரின் பிரதம மந்திரியாக இருப்பதால் என்னிடம் வந்து, அந்த அதிகாரியை இந்த ஊரை விட்டு மாற்றுங்கள். இந்த அதிகாரியை அந்த ஊரை விட்டு மாற்றுதீர்கள், என்று எல்லாம் கூறுகிறார்கள்—இது விஷயமாக ஒன்று கூற விரும்புகிறேன். ஒருவன் செக்கு ஆட்டிக் கொண்டிருக்கிறான். எண்ணெய் ஆனவுடன், அவனே எல்லோருக்கும் வழங்கிவிடுவான். அவன் கொடுக்கும்வரை காத்திருக்காமல் நீங்களே அவசரப்பட்டு செக்கினுள் கையைவிட்டு எண்ணெயை எடுக்க முயற்சித்தால் என்னவாகும்? உங்கள் கை செக்கில் அகப்பட்டு நசுங்கிவிடும். அதைப் போல சர்க்கார் என்ற செக்குக்குள் பொது ஜனங்கள் அவசரப்பட்டு கையை விடக்கூடாது. செக்கை ஓட்டிக்கொண்டிருக்கும் நானே உங்களுக்கு எண்ணெயை எடுத்துத் தருவேன்.

46

செம்படவர்கள் வலையை வீசி மீனைப் பிடிப்பது போல விஞ்ஞானிகள் அறிவைச் செலுத்தி உண்மைகளைக் கண்டு பிடிக்கிறார்கள்.

47

இரவில் தூங்கும்போது, புலன்கள் முழுவதும் எவ்வாறு உயிரில் அடங்கி முற்றிலும் மறைந்து போகின்றனவோ, அவ்வாறே அறிவடைந்த ஜீவன்கள் பரம்பொருளில் அடங்கி ஒன்றுபட்டுப் போய் விடுகின்றன.

48

பசியையாவது கொஞ்சம் பொறுத்துக் கொள்ளலாம், தாகத்தைப் பொறுக்க முடியாது. அதேபோல் சுதந்திர தாகம் நமக்கு ஏற்பட வேண்டும். நமக்கு இப்போது சுதந்திரப் பசி; சுதந்திர தாகம் இன்னும் ஏற்படவில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் மகாத்மா காந்தி இந்தியாவின் சுதந்திரத்தைக் காப்பாற்றும் பணியில் ஈடுபட்டிருக்கிறார். அவர் பகீரத முயற்சியினால் இந்தியாவுக்கு சுதந்திரத்தைப் பெற்றார். ஆனால் ஒரு முயற்சியின் பலனே இன்னொரு புதிய முயற்சியில் ஈடுபடவேண்டிய அவசியத்தை அவருக்கு உண்டு பண்ணியிருக்கிறது. பகீரதன் ஆகாச கங்கையை பூமிக்குக் கொண்டுவரத் தவம் செய்தான். அதன் பலனாய் கங்கை பூமிக்கு வந்தது. ஆனால் அது சாதாரணமாக வரவில்லை. ஆகாயத்திலிருந்து அது கீழே விழுந்த வேகம், உலகத்தையே அழித்துவிடுவது போலிருந்தது. அந்தப் பேராபத்தைத் தடுக்கும் பொருட்டு, பகீரதன் மீண்டும் தவம் இருக்க வேண்டியிருந்தது. அதே போல், சுதந்திரத்தைத் தொடர்ந்து கொடிய வகுப்புக் கலவரங்கள் கிளம்பின. இவை நாட்டையே அழிக்கின்றன. சுதந்திரம் நாசகரமானதாக இருப்பதற்குப் பதில், சந்தோஷகரமானதாக இருக்க வேண்டும் என்பதற்காக காந்திஜி உண்ணாவிரத மிருந்து தவம் செய்கிறார்.

## 50

சிறிய பஞ்சாயத்து சபைகளும், நகர சபைகளும் பகிரங்க மார்க்கட்டில் கடன் வாங்க அனுமதிக்கப் படவில்லை. அவை களுக்கு கெட்ட பெயர் ஏற்பட்டால் அது சர்க்காரைத்தான் பாதிக்கும். எப்படி என்றால் ஒரு நல்ல பாங்க் முறிந்து விட்டால் மற்ற எல்லா பாங்குகளும் கஷ்டப்படும். ஜனங்கள் மற்ற பாங்குகளில் பணம் போட வும் கஷ்டப்படுவார்கள். அதே போலத்தான் முனிஸிபாலிட்டிகளுக்கு ஏற்படும் கெட்ட பெயர் சர்க்காரின் நாணயத்தையும் பாதிக்கும்.

## 51

மோட்சம் அடைவது என்றால் ஓர் ஊரி லிருந்து வண்டி ஏறி அல்லது நடந்து இன் னொரு ஊரை அடைவது போல் அல்ல. அந்தராத்மாவும் தானும் ஒன்றே என்கிற ஞானம் உண்டாகி வெய்யிலும் நிழலும் ஒன் றுதல் போல் உண்மையை அடைவதே மோட்சம்.

 52 

இந்த தேசத்தில் ஆங்கிலேயரால் நிறுவப்பட்டுள்ள பாதுகாப்பு, பாலுக்கும் பிராந்திக்கும் உள்ள வித்தியாசம் போன்றது. விஸ்கி ஒரு மனிதனின் அறிவைத் தொலைத்து அவனைக்கொன்று விடுகிறது. பால் ஒரு மனிதனுக்குஜீவன் அளிக்கிறது.

 53 

ஒருவன் தன் வீட்டைச்சுத்தமாக வைத்துக்கொண்டிருக்கலாம். ஆனாலும் அடுத்த வீட்டுக்காரன் தன் வீட்டை சுத்தமாக வைத்துக்கொள்ளாமல் இருக்கும் வரை தெருவும் காற்றும் அசுத்தப்பட்டு நோய் பரவும். அதைப்போல பொதுவுடமை ஒரு நாட்டில் ஸ்தாபிக்கப் பட்டாலும் பக்கத்து நாட்டில் முதலாளி ஆதிக்கமும் போட்டி வாழ்க்கையும் இருந்து வருமானால் பொதுவுடமை ஸ்தாபிதமான நாட்டிலும் கூட மக்கள் பூரணமான பலனை அடைந்து விட முடியாது.

 54 

விதையைப் பிளந்து நட்டால் செடி முளைக்காது. அதேபோல் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் இரண்டுபட்டால் தேசம் செழிக்காது.

55

ஒவ்வொரு வாரமும் சர்க்காரை மாற்றிக் கொண்டிருந்தால் நாடு துக்கப்பட்டு வருந்த வேண்டியிருக்கும். கோந்தையும் காகிதத்தை யும் கொண்டு புத்தகத்தைப் பைண்டு செய் தால் கோந்து காய்வதற்குள் நாம் அதைத் திறக்கக்கூடாது. திறந்தால் அது கிழிந்து சின்னுபின்னமாகிவிடும். ஒவ்வொரு காரியத் துக்கும் உறுதியாகப் போதிய அவகாசம் அளிக்கவேண்டும். வேர் நன்ருக வளர்ந்திருக் கிறதா என்று பார்ப்பதற்குச்செடியை அடிக் கொருதரம் பிடுங்கிப் பரிசோதனை செய்ய முயற்சிக்காதீர்கள்.

56

நாம் யாருக்கும் அக்கிரமம் செய்ய வில்லை. பக்கத்து நாடுகளை விரோதித்துக் கொள்வதற்கு நமக்குக் காரணமில்லை. நாம் தர்மம் தவராமல் நடந்து கொண்டால் பற்ற வர்கள் நம்மிடம் ஏன் சண்டைக்கு வரப் போகிருர்கள்? நாய் கடித்தால் மனிதன் செத்துப்போய் விடுவான். ஆனல் பக்கத்தி லிருப்பவர்கள் நல்லவர்களாயிருந்தால் நாய் கடிக்காது.

 57 

பொறுமை இயல்பானது. நம்மிடம் வேலை செய்ய அது ஒரு தூண்டுதல். இயற்கை நம்மிடம் அதைப் பதிய வைத்திருக்கிறது. பொறுமை என்பது நெருப்பைப் போலத்தான். நெருப்பு வீட்டை எரிக்க நாம் விடக்கூடாது. உணவு சமைப்பதற்கே நாம் உபயோகிக்க வேண்டும்.

 58 

உடலில் நரம்புகளின் வேகங்கள் ஒன்றுக்கொன்று பொருந்தி சம நிலையில் நிற்காமல் போனால், கெட்ட வியாதிகள் தோன்றுகின்றன. அதைப்போலவே, தற்கால உலக வாழ்க்கையில் காணப்படும் குறைகளுக்குக் காரணம், சமய - அரசியல் - பௌதீக அறிவு முரண்பாடே என்று சொல்லலாம்.

 59 

"வேறு விதமான தொகுதி ஏற்பாடு செய்யப்பட்டிருக்குமேயானால், பதினோரு மாகாணங்களிலும் காங்கிரஸ் கட்சி மெஜாரிட்டியினராக சட்ட சபையில் ஆகியிருக்க முடியாது" என்கிறார் எதிர்கட்சிப் பிரமுகர். வாஸ்தவம்தான். புள்ளி விபரத்துக்கு என்ன? எத்தகைய எண்ணை வேண்டுமானு

லும் கணக்கில் உண்டுபண்ணி விடலாம். நீ எந்தத் தராசை, எந்த எடைக்கல்லை உபயோகிக்கிருய் என்பதை அது பொறுத்திருக்கிறது. மணங்குக்கல் என்ருல் ஒன்று வைத்தால் போதும். வீசைக்கல் என்ருல் எட்டு வைக்கவேண்டும். சேர்கல் என்ருல் நாற்பது வைக்கவேண்டும். முன்னூறு வாக்காளர்களைக்கொண்ட ஒரு தொகுதியைச் சட்டைப் பையில் போட்டுக்கொண்டால்,முப்பது ஆயிரம் வாக்காளர்களைக் கொண்ட தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியுடன் சட்ட சபையில் சமமாக உட்கார முடியும்.

★ 60 ★

தீண்டாமை என்பது நமது சமூகத்தில் ஒரு மாசு; அதை எப்படியும் போக்கவேண்டும். அது இரண்டாயிரம் வருஷங்களாயிருக்கும் தீமை. மலையைக்கூட அகற்றி வேறிடத்தில் வைத்து விடலாம். ஆனுல் வைதீகத்தின் கோட்டையைத் தகர்ப்பது மிகவும் கஷ்டம். தீண்டாமை ஒரு விஷப்பாம்பு. அதைக் கொல்ல வேண்டும்.

★ 61 ★

விவசாயக் கடன் நிவாரண மசோதாவைச் சட்டமாக்குவதில் சிறிது காலதாமதம் செய்யலாம் என்று சிலர் சொல்லுகிருர்கள்.

இந்த விஷயத்தில் மெதுவாகக் காரியத்தைச் செய்வது ரொம்ப அபாயகரமானதாகும். இந்த இடைக்காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு கடன் கொடுத்தவர்கள் விவசாயிகளுக்கு நிவாரணம் அளிப்பதற்குப் பதில் அவர்களுடைய சொத்துகளை அவசரம் அவசரமாகஏலத்துக்கு கொண்டு வருகிறார்கள். ஆகையால் நாம் நேரத்தை வீணுக்கக் கூடாது. டாக்டரிடம்போகுமுன்பு எவ்வளவு தரம் வேண்டுமாஞலும் யோசித்து மெதுவாகப் போகலாம். ரண சிகிச்சை நடக்கும் அறைக்குள் கூட மெதுவாகப் போகலாம். ஆனுல் 'குளோபாரம்' கொடுத்த பிறகு டாக்டர் காலதாமதம் செய்யக் கூடாது. சிறிது சிந்திக்கலாம்; சிறிது பேசலாம் என்று அவர் நேரம் கடத்த அதுவல்ல சமயம். உடனே அறுத்துத்தைத்து, கட்டுக் கட்டாவிட்டால் அதாவது நேரத்தைச் சரியாகப் பயன்படுத்தாவிட்டால் உயிருக்கு ஆபத்து. ஆள் பிழைக்கமாட்டான்.

 62 

மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை இந்தியர்களின் கைக்கு மாற்றியவுடன் சமஸ்தானங்களின் மீது அதற்கு இருந்துவந்த

ஆட்சி செல்லுபடியாகாது என்ற ஒரு புதிய கருத்தை இப்போது வெளியிட ஆரம்பித்திருக்கிறார்கள். மத்திய சர்க்காருக்கும் சமஸ்தானங்களுக்கும் நூறு வருஷங்களாக இருந்துவந்த ஒரு தொடர்பை இவ்வாறு ஒரு புதிய கருத்தை வெளியிட்டு அதைத் தகர்த்தெறிய முற்படுகிறார்கள். மத்திய சர்க்காருக்கும், சமஸ்தானத்துக்கும், தொடர்பு இல்லை என்றுசொன்னால் சுதந்திரம் கிடைத்தாலும் கூட அந்த சுதந்திரமானது எத்தகைய அராஜகத்தையும், குழப்பத்தையும் நாட்டில் உண்டுபண்ணி விடும் என்பதை சிறிது சிந்தித்துப் பாருங்கள். பிரிட்டிஷ் ரயில்வே இஞ்சினீயர்கள்தான் இந்தியாவில் ரயில்வே பாதைகளை நிர்மாணித்தார்கள். பிரிட்டிஷ் அதிகாரம் மாறிவிடுவதால், தாங்கள் நிர்மாணித்த ரயில்வே பாதைகளை நாசம் செய்துவிட வேண்டும் என்று இன்றைய பிரிட்டிஷ் இன்சினீயர்கள் ஒன்று கூடி ஒரு கருத்தை வெளியிட்டால் எப்படியிருக்கும்? இதைப்போலத்தான் அதுவும்.

 63 

பிரிட்டிஷ்காரனின் கொடுமையை ஒழிக்க ஜப்பான்காரனை வரவேற்பது தவறு. எலிகளின் உபத்திரவம் தாங்க முடியவில்லையே என்று நினைத்து, அவைகளை ஒழிக்க

யாராவது நல்லபாம்பை வீட்டுக்குக்கொண்டு வருவார்களா? நல்ல பாம்பு எலிகளை விழுங்குவதோடல்லாமல் குடியிருப்பவர்களையும் இல்லத்தை விட்டே விரட்டி விடுமே.

 64 

பலாத்காரம் ஒரு நோய் அதைக் குணப் படுத்த வேண்டும். இப்பொழுது நம்முடைய சர்க்கார் கையிலிருக்கும் மருந்து மட்ட ரகமானதுதான். எனினும் உயர்ந்த ரக மருந்து கிடைக்கும் வரையில் கைவசம் இருக்கும் மருந்தை உபயோகப்படுத்தாமல் இருக்க முடியாது. உயர்ந்த ரக மருந்தை பெறுகிறவரையில் கைவசமுள்ள மருந்தைக் கொண்டே நோயைக் குணப்படுத்த வேண்டியதிருக்கிறது. இதுதான் காங்கிரஸ் மந்திரி சபை ரிஸர்வ் போலீஸ் படையைக் கலைக்காமல் வைத்திருப்பதற்கு நான் கூறக்கூடிய ஒரே சமாதானம்.

 65 

முதலாளிகளையும், தொழிலாளிகளையும் ஒரு ஆற்றின் இரு கரைகளாய் கருதவேண்டும். இதில் ஏதேனும் ஒரு கரை உடைத்

துக்கொண்டு போனால், ஆற்றிலிருக்கும் தண்ணீர் வற்றிவிடும். ஊரிலிருக்கும் பொது ஜனங்களுக்கும் ஆபத்து உண்டாகும். குழாய்கள் இருந்தால் கரைகள் இருக்க வேண்டிய அவசியமில்லை. அதைப்போலவே, சொத்து சகலருக்கும் சொந்தமாயிருந்தால் இரு வகுப்புகள், (தொழிலாளிகள்-முதலாளிகள்) இருக்காது. இந்தக் குழாயை வைக்கும் காலம், இந்நாட்டுக்கு இன்னும் வரவில்லை.

 66 

ஜனங்களின் பொறுமையையும் கட்டுப்பாட்டையும் பரீக்ஷிப்பதற்காகவே காந்திஜி கதரையும் நூல் நூற்றலையும் பற்றி அடிக்கடி கூறி வருகிறார். ஒரு வைத்தியர் ஒரு நோயாளியின் வாயில் தர்மா மீட்டரை வைக்கிறார். அந்தக் கருவியை சில விநாடிகள் வரை பொறுமையுடன் வைத்துக்கொள்ள நோயாளி இஷ்டப்படாவிடில், வைத்தியர் தர்மா மீட்டரை எடுத்துக்கொண்டு சென்று விடுவார். அதேமாதிரி காந்திஜி, ஜனங்களின் சாந்தத்தையும் பொறுமையையும் கதர் மூலமும், நூல் நூற்றல் மூலமும் சோதிக்கிறார்.

 67 

ஏரியில் நீர் நிறைவது விவசாயிக்குப் பயன்படத்தான். 'இத்தனை தண்ணீரும் என் நன்மைக்காகவே' என்று ஏரி கற்பனை செய்துகொண்டிருக்கலாம். ஆனால், ஏரித் தண்ணீர் ஏற ஏற, மடையைத் திறந்து, தண்ணீரை வெளியே விடவேண்டியது அவசிய மாகிறது. இது இயற்கையின் சட்டம். ஏராள மாய்ப் பணம் குவித்த மனிதனும், ஏரியைப் போலவே, தன் பணத்தைத் தாராளமாகப் பிறர் உபயோகத்துக்கு வழங்கிவிடுவான். ஆகையால், பணக்காரர்களைப் பார்த்து யாரும் ஆத்திரம் கொள்ளத் தேவையில்லை. நாம் மட்டும் கொஞ்சம் பொறுமையாக இருந்தால், பணக்காரர்கள் தாமாகவே, தங்கள் செல்வத்தைப் பொது நன்மையான காரியங்களுக்கு உதவ முன் வருவார்கள்.

 68 

தங்களைத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்று ஹரிஜனங்கள் எண்ணக் கூடாது. 'தாழ்த்தப்பட்ட' என்ற பதத்தையே அவர்கள் மறந்துவிடவேண்டும். ஒரு காலத்தில் அவர்கள் அப்படி அழைக்கப்பட்டதால்,

அவர்கள் இப்போது தாழ்த்தப்பட்டவர்களாகவே இருக்க வேண்டியதில்லை. விதை விதையாகவே இருக்காது. பூக்கள் காய்கள், பழங்கள், இவைகளைத் தரும் பெரிய மாமாகி விடும்.

 69 

குழந்தைக்கு அப்பா வேணுமா, அம்மா வேணுமா என்றுகேட்டால் என்ன செய்யும்? தாயார் சில விஷயங்களுக்கும், தகப்பனார் சில விஷயங்களுக்கும், ஆக இருவரும் வேணுமென்று குழந்தை சொல்வது இயல்பு. அது போல தமிழ், இந்துஸ்தானி இரண்டும் அவசியம். ஹிந்துஸ்தானி தேசம் பூராவுக்கும். தமிழ் நம் தாய் பாஷை. நாம் நம் வீட்டில் வசிக்கிறோம். ஒரு வீட்டிலிருந்து மற்றொருவர் வீட்டுக்குப் போக ரஸ்தா இருக்கிறது. வீடு நமக்கு, ரஸ்தா எல்லோர்க்கும் பொது. வீடு போதும், ரஸ்தா வேண்டாம் என்று சொல்ல முடியாது. ஒரு குழந்தை செல்வமாய் வளர்க்கப்பட்டு வீட்டிலேயே இருந்தால் வெளியே போகத் தெரியாது. என்றைக்காவது போனால் ஒன்றும் தெரியாமல் வண்டியில் அகப்பட்டுக் கொள்ளும்.

 70 

காங்கிரஸ்காரர்கள் சத்தியாக்கிரகம் செய்ததைப் போல் நாங்களும் சத்தியாக்கிரகம் செய்கிறோம், என்று இந்தி எதிர்ப்புக்காரர்கள் கூறுகிறார்கள். அவர்கள் செய்வது சத்தியாக்கிரகம் அல்ல. ஒரு பேனாக் கத்தியை நாம் வெட்டி அறுக்கவும், காய் கறிகளை நறுக்கவும் உபயோகப்படுத்தலாம். அதே சமயம் கையை வெட்டிக்கொள்ளவும் இன்னொருவன் மார்பில் குத்தவும் அதைப் பயன் படுத்தலாம். அதற்காகக் கத்திகளைப் பயன் படுத்தாமல் தூற எறிந்துவிட முடியாது. ஆனால் கத்திகளை அபாயகரமான முறையில் உபயோகப்படுத்துகிறவர்களைப் பார்த்துக் கொண்டு சர்க்கார் சும்மா இராது. அதைப்போல சத்தியாக்கிரகம் என்ற பெயரால் துராக்கிரகம் செய்து ஜனங்களிடம் துவேஷத்தை உண்டாக்கினால் யாரும் பார்த்துக்கொண்டிருக்க முடியாது.

 71 

மதுவிலக்குச் சட்டம் அமுலுக்கு வருவது, ஒரு வீட்டிற்கு மருமகள் வருவதுபோல. அவளைக் காப்பாற்றுவது மாப்பிள்ளை மாமியார்கடமையாகும். புதிதாகவாங்கிவந்த

பசுவிற்கு தீனி சவரக்ஷணை எல்லாம் செய்தால்தான் பால்கறக்கும். அதைப் போலவே மதுவிலக்கைக் காப்பாற்றி அதன் பலனை அனுபவிக்க சட்டத்தை சரிவர பாதுகாக்க வேண்டியது கிராமவாசிகளின் கடமையாகும்.

72

பந்தல் போட்டாய்விட்டது. எல்லாரும் மணப்பெண்ணின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் ஆனால் திடீரென்று 'மேளதாளங்களை நிறுத்து. கலியாணமில்லை', என்று நாம் சொல்லுகிறோம். உடனே பந்தலைப் பிரித்து தடபுடல்களை நிறுத்த வேண்டியதிருக்கிறது. இந்தமாதிரி சில சமயம் இந்த உலகில் செய்ய வேண்டியதிருக்கிறது. அதைப்போலவேதான், நாம் நிறைவேற்றுவதற்கு அநேக திட்டங்களை வகுத்தோம். அவை ரொம்ப முக்கியமானவை என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அந்த சமயத்தில்,(26—10—39) வேண்டாம் இந்த மந்திரிசபைஎன்று வெளியேறுகிறோம்.

## 73

மேல் ஜாதியினர் கீழ்ஜாதியினரை உயர்வாகக் கருதினால் மேன்மை ஏற்படும் அதற்காக கீழ் ஜாதியினர் என்போரை கல்வியாகிய தண்ணீரை விட்டு வேராகிய அறிவை வலுப்படுத்த வேண்டும். மண் இருந்தால் தான் மரம். மண் கீழ் ஜாதியினர், மரம் மேல் ஜாதியினர்.

## 74

ஒரு பானையை உடைப்பது சுலபம். அது எவ்வளவுக் கெவ்வளவு பெரிதாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதை உடைப்பது சுலபம். ஆனால் அதை மீண்டும் பழைபடியே உருவாக்குவது சிரமம். பானையை உடைக்க வேண்டியது, அவசியம்தானா, அது உடைந்தால் அதன் ஸ்தானத்தில் வேறு பானையை வைக்கமுடியுமா என்பதைப் பற்றி முதலில் சிந்திக்க வேண்டும், இதைப் போலவே, என்னை மீண்டும் தமிழ் நாட்டு அரசியலுக்குத் தலைவனாகப் பெறுவது என்ற எண்ணத்தைத் தூர வைத்துவிட்டு, உங்களில் சிறந்த ஒருவரை பொறுக்கி எடுத்துக் கொள்ளுங்கள் பொருத்தமானவரை விலக்குவதற்கும்., பொறுக்குவதற்கும் முன்பு சிந்தியுங்கள்.

கல்யாணம் என்பது சாதாரண விஷய மல்ல. கஷ்டமான பொறுப்புகளையும் கடமைகளையும் அது கணவன் தோளில் சுமத்துகிறது. மனைவியாக வரப்போகிறவள் இலேசுபட்டவளாக இருக்க மாட்டாள். அவள் புருஷனை ஆட்டிவைப்பாள். செலவை உண்டுபண்ணுவாள். தொந்திரவுகளை கொடுப்பாள். அவள் அப்படியிருக்கிறாளே என்று நீ அவளைத் தள்ளிவிட முடியாது. அவளைக் காப்பாற்றுவது உன் பொறுப்பு உன் கடமை. அதேபோல்தான், நமக்கு வரப்போகும் சுதந்திரம். 1948, ஜூன் மாதத்தில் பிரிட்டிஷார் அதிகாரத்தை மாற்றுவதாகக் கூறி யிருக்கிறார்கள். அதற்கு இப்போதிருந்தே, கல்யாணத்துக்கு நடப்பது போல் தயாரிப்புகள் நடக்கின்றது. பொறுப்புகளை சுமக்கவும், மனையைக் காப்பாற்றவும் எப்படி மாப்பிள்ளை தயாராக இருக்கவேண்டுமோ, அப்படி சுதந்திரம் தரும் பொறுப்புகளை தைரியத்துடன் ஏற்கவும், அதைக்காப்பாற்றவும் நாம் தயாரா இருக்க வேண்டும்.

பாஷாவாரி மாகாணங்களைப் பிரிவினை செய்து விடவேண்டுமென்று காங்கிரஸ் தீர்மானம் செய்து நிரம்ப நாட்களாகி விட்டது. ஆனால் அது இன்னும் நிறைவேற்றப்படவில்லை. "ஏன் உங்களுக்கு வசதி கிடைத்தும் அதை நிறைவேற்றவில்லை?" என்று சிலர் கேட்கிறார்கள். பாஷாவாரி மாகாணங்களைப் பிரிப்பதென்று காங்கிரஸ் செய்த தீர்மானம், ஒரு பெண்ணைக் கல்யாணம்செய்துகொடுத்ததற்கு ஒப்பாகும். கல்யாணம் முடிந்த பிறகு, "பெண்ணை மாமியார் வீட்டுக்கு அனுப்பவேண்டும்" என்று மாமியார் வீட்டார் சொல்வதும், 'ஏன் இன்னும்அனுப்பவில்லை'என்று கேட்பதும்சகஜம். தன் பெண் இன்னும் சிறிது காலம் தங்களுடனேயே இருந்து குடும்ப நிர்வாக விஷயங்களை நன்றாகக்கற்றுக்கொண்டால், மாமியார் வீட்டுக்குப் போனவுடன் நன்றாகக் குடித்தனம் செய்து பெற்றோருக்கும் பெருமையை உண்டுபண்ணுவாள் என்று பெண்ணின் பெற்றோர்கள் நினைப்பது சகஜம். உடனே பெண்ணை மாமியார் வீட்டுக்கு அனுப்பாதது பெற்றோர்கள் அந்தக் கலியாணத்தை விரும்பவில்லை என்றோ அல்லது தம் பெண்

வாழாவெட்டியாக தம் வீட்டிலேயே இருக்க வேண்டுமென்றோ நினைக்கிறார்கள் என்று அர்த்தமில்லை. பெண் நல்ல பக்குவமடைந் தவளாய், திறமைசாலியாய் புத்திசாலி யாய் மாமியார்வீட்டில் வாழவேண்டுமென்ற ஆசையே அவளை உடனடியாக மாமியார் வீட்டுக்குப்பெற்றோர்கள் அனுப்பாததற்குக் காரணம்.

 77 

இந்தியாவை ஹிந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் இன்னும் பலருக்குமாகப் பிரிக்க இதுதான் சரியான சமயமென்று சிலர் நினைக்கின்றனர். மழையும் புயலும் அடிக்கும்போது கூரையையும், ஜன்னலையும் எடுத்து வீட்டைப் பிரிக்கும் புத்திசாலித் தனத்தை இது நிகர்க்கும்!

 78 

ஹிந்து முஸ்லீம் பிரச்னையைத் தீர்க்கத் தனித்தொகுதியை ஒழித்தால்தான் முடியும். ஒரு துணியில் ஓட்டை ஏற்பட்டால் இரண் டாகக் கிழிப்பது தவறு. சேர்த்துத் தையல் போடுவதுதான் சரி. இந்தத் தையல்தான் கூட்டுத் தேர்தல் முறையாகும்.

79

காட்டு யானையைப் பார்த்திருக்கிறீர்களா? அது பொல்லாதது; நிரம்ப சக்தி வாய்ந்தது; அதைப் பிடிப்பதும், அடக்குவதும், நமக்குப் பயன் படுத்துவதும் மகா சிரமமான காரியம். அரசியல் அதிகாரம் என்பது ஒரு காட்டு யானை. நாம் நிரம்ப கஷ்டப்பட்டு அதைப் பிடித்திருக்கிறோம். ஆனால் இன்னும் அடக்கவில்லை. அதை அடக்கினால்தான் நம் நன்மைக்குப் பயன்படுத்த முடியும். அந்த வேலையைச் செய்ய இப்போது தேசம் தயாராக இருக்க வேண்டும்.

80

கல்வி வேறு படிப்பு வேறு. கல்வியானது புத்தி, ஆத்மா சிறப்புப் பெற சீர்பட்டு நிற்பது. வெறும் எழுதப்படிக்கத் தெரிந்திருப்பது மட்டில் அதைத் தந்து விடாது. தண்ணீர் மட்டும் ஆகாரமாகி விடாது. ஆனாலும் அவசியமானது தான். ஆயினும் அதைவிட உணவு முக்கியமானது. அதைப் போலவே எழுதப் படிக்கத் தெரிவது மட்டும் கல்வியைப் பெற்றதாகாது.

 81 

ஸம்ஸ்கிருத, தமிழ் பண்டிதர்கள், தங்களை 'லெக்சரர்கள்' என்று வழங்க வேண்டுமென்று கேட்பது, இந்த நாட்டில் மஹாராஜாக்கள். தங்களை 'டியூக்குகள்', 'லெப்டினன்ட்'கள் முதலான பெயர்களால் வழங்க வேண்டுமென்று கேட்பது போலாகும். பண்டிதர்கள் பண்டிதர்களாகவே அழைக்கப்பட வேண்டும். அது நமது தேசப் பெயர். அர்த்த புஷ்டியுள்ளது; கௌரவம் வாய்ந்தது; அப்படியிருக்க 'லெக்சரர்' என்ற அன்னிய பெயருக்கு ஆசைப்படுவானேன்?

 82 

குழந்தை பால் சாப்பிடும் பழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்றால், பால் சாப்பிடும் விஷயத்தைக் குழந்தையின் இஷ்டத்திற்கு விட்டுவிடுவதா? குழந்தைகள் எவ்வளவு வீறிட்டு அழுதாலும் சரி, தாய்மார்கள் குழந்தைகளுக்கு பாலூட்டுவதை நீங்கள் கவனித்ததில்லையா? அதேபோல், பையன்கள் ஹிந்துஸ்தானி கற்றுக் கொள்ளும்படிச் செய்ய முதலில் கட்டாயம் வேண்டும். பிறகு அவர்களே அதை விரும்புவார்கள்.

 83 

காங்கிரஸ் மந்திரி சபை ராஜிநாமா செய்ததைப்பற்றி சிலருக்கு விசனம். குதிரைமேல் ஏறிக்கொண்டே நாம் சமையல் செய்ய முடியாது. கீழே இறங்கித்தான் செய்ய வேண்டும். அதைத்தான் இப்போது செய்கிறோம். இபபோது குதிரைக்காரன் மேலே ஏறிக்கொண்டிருக்கிறான் என்றால் சொந்தக்காரனல்ல. தேய்த்துக் குளிப் பாட்டிச் சுத்தமாக வைத்திருப்பவன்தான். குதிரை நம்முடையதுதான். 'குதிரையைச் சுத்தமாக வைக்கவில்லை'என்ற புகாரை நாம் கவனித்தால் நம்முடைய சமையல் ஆகாது. நம் வேலையைக் கவனித்தால் குதிரைமீது மறுபடியும் எவ்வளவு தரம் வேண்டுமானா லும் ஏறலாம். நாமேமுதலில் இறங்கினோம்; நமக்கே ஏறவும் தெரியும். நம் சொந்தக் குதி ரையாகையால் என்றும் தைரியமாயிருக்க வேண்டும்.

 84 

"வேர்ஸேல்ஸ்" உடன்படிக்கை ஓர் எரிமலையைப் போன்றது. அதை சர்வதேச சங்கம் என்ற தாழங்கூடையைப் போட்டு மூடினார்கள். எரிமலை வெடித்தது. தாழங் கூடையும் எரிந்து போயிற்று.

வண்டி இழுக்கும் காளைகளைப்பார்த்திருக்கிறீர்களா? அவற்றின் கண் பின்னேயுள்ள வண்டிக்காரனின் சாட்டை அல்லது குச்சி மீது இருக்கும்; அதே சமயத்தில் முன்னுள்ள பாதையின்மீதும் இருக்கும். காளைகளின் கண் அஷ்டாவதானம் செய்கிறது. வருங்காலத்தில் நம் ஜனநாயக சர்க்கார்களும் இந்த வண்டிக் காளைகளைப்போலவே விழிப்பாயிருந்து, அஷ்டாவதானம் செய்ய வேண்டும். காளையின் நாலு கால்களும் இசைந்து ஒற்றுமையாக நடக்கின்றன. அது மகா கஷ்டமான வேலை. நீங்கள் தவழ்ந்து பாருங்கள்; கஷ்டம் தெரியும். இரண்டு பையன்களின் காலைக்கட்டி ஓடும் விதத்தைத் தான் நீங்கள் பார்த்திருப்பீர்களே. இப்படித்தான் மந்திரி சபையும். அது பல மந்திரிகளைக் கொண்ட பல கால் பிராணி. மந்திரிகள் பாடு கொண்டாட்டம் என்று நினைக்காதீர்கள். அவர்கள் வண்டியில் கட்டிய காளைகள். பத்திரிகைகளும் பொதுஜன அபிப்பிராயமும் சாட்டை வீசும் வண்டிக்காரர்கள். ஆனால், மகாத்மாஜீயும் பிற தலைவர்களும் வகுத்த பாதையிலேயே மந்திரிகள் நடக்க வேண்டும்.

 86 

படித்த வாலிபர், தங்கள் நேரத்தில் ஒரு பகுதியைத் தங்களுடைய குழந்தைகளுக்குப் போதிக்கச் செலவிட வேண்டும். எனக்கு எட்டு வயதிலேயே, என் வயதுக் குழந்தைகள் அறியாத பல விஷயங்களை நான் கற்றுவிட்டேன். எப்படி? என் அண்ணன்மார் வருஷம் தவறாமல், மெட்ரிகுலேஷன் பரீட்சையில் சுழித்து வந்தார்கள். ஒவ்வொரு வருஷமும் சுழித்தவுடனே, பழைய புத்தகங்களை என்னிடம் எறிந்து விடுவார்கள். எனக்கு அவை மிகவும் சுவையாயிருந்தன. படித்தேன். ஒன்பது வயதிலேயே, ஹெர்குலீஸையும் கிரேக்கப் புராணத்தையும்பற்றி ஏராளமான விஷயங்களை அறிந்துவிட்டேன். என் அண்ணன்களைக் கேலி செய்வதற்காக இதை நான் சொல்லவில்லை, தங்களை அறியாமலே அவர்கள் எனக்குக் கல்வி புகட்டிவிட்டார்கள் என்றே சொல்ல வந்தேன். நீங்கள் இதைவிட மேலாக உங்கள் குழந்தைகளுக்கு எவ்வளவோ போதிக்கலாம்.

 87 

ஆயுத பலத்திற்கு நிரந்தரமான வெற்றி கிடையாது. ஆயுதங்கள் சில காரியங்களுக்குத் தேவைதான். காய்கறி நறுக்க ஆயுதம் வேண்டும்.

 88 

நாம் சுதந்திரத்தை சம்பாதித்துவிட்டோம்; சுதந்திரமாய் வாழத்தான் இன்னும் கற்கவில்லை. பிரிட்டிஷ் அதிகாரத்துக்குப் பக்தி செலுத்துவது நமக்குச் சுலபமாயிருந்தது; சொந்த ஜனநாயக அதிகாரத்துக்குப் பக்தி செலுத்துவது கஷ்டமாயிருக்கிறது. இன்று ஒரு சின்னக் கடைக்காரராக இருப்பவர், நாளைக்கு நம் ஜனாதிபதியாக வரலாம். உடனே அவரை நம் ராஜாங்கத் தலைவராக மதிக்க வேண்டுமே யொழிய, பழைய கடைக்காரர் என்று எண்ணக்கூடாது. காலடியில் கிடக்கும் களிமண்ணை எடுத்துக் கணேச உருவம் பிடித்துவிடுகிறீர்கள். அதன் முன்னே விழுந்து வணங்குகிறீர்கள். வணங்கியபின் அதை நீரிலே எறிந்து விடுகிறீர்கள். மந்திரிகளை ஆக்கியவர் நீங்களே. முந்தி இருந்த அதிகாரிகளுக்குச் செலுத்திய மரியாதையை இவர்களுக்கும் நீங்கள் செலுத்த வேண்டும். மந்திரிகள் கணேசரைப் போல.

 89 

சைவனுக்கு மாமிசத்தின் மீது எத்தகைய வெறுப்பு இருக்கிறதோ அத்தகைய வெறுப்பு அடிமைத் தனத்தின் மீது ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும்.

## 90

ஆலயப் பிரவேசத்தால் ஹரிஜனங்களுக்குக்கிடைக்கும் அளவுநன்மை மற்றெந்த வகையிலும் கிடைக்காது. உத்தியோகங்கள் கிடைக்கின்றனவே என்று ஹரிஜனங்களே, தங்களைத் 'தாழ்ந்த வகுப்பினர்' என்று சொல்லிக் கொள்வார்கள். பாடசாலையில் சேர்ந்து படிக்க வேண்டுமென்று எப்போதாகிலும் செல்லும்போதும், ரயிலில்போகும்போதும் ஆக்ஷேபிக்காத எதிரிகள் ஆலயப் பிரவேசம் என்றதும் ஆக்ஷேபிப்பதில் ரகசியமிருக்கிற தென்று தெரியவில்லையா? உபயோகமில்லாத சாமான் கொடுப்தில் ஆக்ஷேபணையில்லை. விலை யதிகமான சாமானைக் கொடுத்தால் ஆக்ஷேபணை உண்டாகும்.

## 91

செடிகள் வளர வெய்யில் வேண்டும். சமூகம் வளரச் சமுதாய விழாக்கள் வேண்டும். கொம்பு, கூத்து, கூட்டம் எல்லாம் வேண்டும். 'மத்தளம் மேளம் இதெல்லாம் மூட நம்பிக்கை; வீண் செலவு. கடவுளைத் தியானிக்க இவை எல்லாம் என்னத்துக்கு?' என்று விழாக்களையும் உற்சவங்களையும், நோன்புகளையும் தள்ளி விட்டோமானல் சமுதாயச் செடி வாடிப் போகும்.

 92 

“ஆங்கிலேயர்கள் காங்கிரசை ஒடுக்குவதற்கு உபயோகித்த சட்டங்களை காங்கிரஸ்காரர்களாகிய நீங்கள் கண்டித்தீர்களே. ஆனல் இப்போது அதே சட்டங்களை நீங்கள் இந்தி எதிர்ப்பாளர்கள் மீது உபயோகிக்கலாமா?” என்று கேட்கிறார்கள். அவர்களுக்கு நான் சொல்லும் பதில் இதுதான். திடீரென்று வீட்டுக்குள் திருடன் வந்துவிட்டால் அப்போது எந்த ஆயுதத்தை உபயோகிப்பது என்று யோசிப்பது? அந்தத் தருணத்தில் கையில் கிடைத்த ஆயுதத்தைத் தான் உபயோகிக்க வேண்டும்.

 93 

பிரிட்டிஷார் டொமினியன் அந்தஸ்து கொடுக்கத் தயாராக இருந்தார்கள். ஆனல் காங்கிரஸ் பரிபூர்ண சுதந்திரம்கேட்டதினல் தான் காரியம் கெட்டது என்று சிலர் கூறுகின்றனர். “தண்ணீர் இல்லாமல் பால் கொடு என்கிருயா? உன்னோடு பேரம் செய்ய முடியாது போ” என்பதுபோல் இருக்கிறது இவ்வாதம்.

 94 

தேசபக்தி என்பதற்கு இன்று புது லட்சணம் வகுக்க வேண்டும். அதைப் புதிதாய் உணரவேண்டும். முன் நாட்களில் அது வெறும் போராட்டமாயிருந்தது; கிளர்ச்சியோடு அமைந்தது. இன்று கடின உழைப்பே தேசபக்தி; புது வீட்டைக் கட்டுவது போன்ற கடின உழைப்பு. புது வீட்டைக் கட்ட நல்ல எஞ்சினீயரின் திறமை வேண்டும்.

 95 

மகாத்மா இறந்தார். ஆனால் அவர் என் மூலமும் நேருவின் மூலமும், வாழ்கிறார் என்று சொல்லுகிறீர்கள். இல்லை, அவர் பொது ஜனங்கள் அனைவர் மூலமும் வாழ்கிறார். ஒரு சிட்டிகை உப்பை நீரில் போட்டால், அத்தனை நீரும் உப்பாகிறது. மகாத்மாஜீ உப்பைப்போன்றவர். பொது மக்கள் அத்தனை பேரும் ஜலம். நல்லவர்களாயிருந்து நல்ல குழந்தைகளைப் பெற்று வளர்ப்பீர்களானால், எல்லாருக்கும் மகாத்மாவை அள்ளி வழங்குவீர்கள்.

 96 

முதியோரை, எழுத்து தெரியாத ஒரு குறை காரணமாகக் குழந்தைபோல் பாவிக்கக் கூடாது. சிறிய செடிக்கும் மரத்திற்குமுள்ள வித்தியாசத்தைப் போல் குழந்தையும் முதியோருமாவார்கள், குழந்தைகளுடன் பெரியோர்களை வைத்து அவமதிக்கும் விதத்தில் கல்வி சொல்லிக் கொடுக்கக் கூடாது. குழந்தைகள் முன் பெரியோர்களை அவமதிக்காத முறையில் கௌரவமாய் நடத்த வேண்டும்.

 97 

வீட்டிலுள்ள பிள்ளை கல்யாணமாகாமல் சிறு பிராயத்தில் தூரப் பிரதேசத்திற்கு ஓடிப்போய், வெகு காலம் சென்று கல்யாணமாகி குழந்தை குட்டிகளுடன் நம் வீட்டுக்குத் திரும்பி வருவதுபோல், நம் பண்டைய வைத்திய சாஸ்திரம் நம்மவர்களால் கவனிக்கப் படாமலும் விருத்தி செய்யப் படாமலுமிருந்து, அன்னியர்களால் பராமரிக்கப்பட்டு, நூதன முறைகளுடன் நம் நாட்டிற்கு வந்திருக்கின்றது.

 98 

நோய்க்கு முன்பு அடையாளங்கள் தெரியும். அடையாளங்களே நோய் அல்ல. அடையாளங்களைக் கண்டவுடன், நோய் வரப்போகிறதென்பதை உணர்ந்து, மருந்து கொடுக்க வேண்டும்; அதேபோல்தான், வேலை நிறுத்தங்கள். அவை நோய் அல்ல; அடையாளங்களேயாகும்.

 99 

ஒருவன் ஒரு பெண்ணை மணந்துகொள்ள விரும்பினால், ஜோசியரிடம் இருபது தடவை செல்வதால் அவளைப் பெற முடியாது. உறுதி கொண்டால் தான் அப்பெண்ணைப் பெறலாம். பூர்ண சுதந்திரம் நம்மை நேசிக்கிறது. நாம் அதனை நேசிக்கிறோம். விவாகம் நடந்தே தீரும்.

 100 

உங்கள் ஊரில் 'பிளேக்' அல்லது 'காலரா' கண்டால் என்ன செய்வீர்கள்? அந்த தொத்து நோய் உங்களையும் பிடிக்காமல் தப்ப வழி பார்ப்பீர்கள். அதேபோல் தான், துர்ப்பாக்கியமான வஞ்சகக் காரியங்களை நீங்கள் கருத வேண்டும். அவற்றிருந்து தூர விலகி ஓடுவதற்கு வழியென்ன என்று சிந்தியுங்கள்.

ககர சகர வர்க்கங்களின் எல்லா வித சப்தங்களையும் உச்சரிப்பதற்குத் தகுந்த எழுத்துக்கள் தமிழில் இல்லை என்று குறை கூறுவது சுத்தஅபத்தம். இங்கிலீஷில் உள்ள F போன்ற எழுத்துக்குப் பிரதி எழுத்துத் தமிழில் இல்லையே என்று கேட்கலாம். தமிழில்உள்ள 'ழ' வும் மற்ற அநேக பாஷைகளில் இல்லை. ஒரு மொழியின் எழுத்துக்கள் அந்த மொழியின் சொற்களை உச்சரிப்பதற்கே ஏற்பட்டவை. வேறு பாஷைச் சொற்களைச் சரியாக எழுத இந்த பாஷையில் எழுத்து இல்லையென்பது ஒரு குறை யாகாது. இது எப்படியென்றால், பழையசட்டைகள்விற்கும் கடைக்குப் போய் ஒருவன் பழைய சட்டையை விலைக்கு வாங்குகிறன்; அதைப் போட்டுக் கொண்டு பார்க்கிறன். கழுத்து பிடிக்கிறது; கை நீளமாயிருக்கிறது. அவன் அந்தச் சட்டையைத் தைத்த தையல் காரனைத் திட்டுவது நியாயமாகுமா? அந்தத் தையல்காரன் இவனுக்கு அளவெடுத்தா அந்தச் சட்டையைத் தைத்தான்? யாருக்கோ தைத்த சட்டையை இவன் போட்டுக் கொண்டு தையல்காரன்மேல் புகார் சொல்வதுபோலத்தான், தமிழில் வேறு பாஷைச் சொற்களை எழுத முடியவில்லையே என்று குறை கூறுவதும்.

## 102

காங்கிரசை விட்டு வெளியேறியவர்களை மீண்டும் காங்கிரஸில் சேர்த்துக்கொள்ளக் கூடாது என்று சிலர் எண்ணுகிறார்கள். இது தவறு. நம் வீட்டுப் பெண்மணிகள் வீட்டைப் பெருக்கும்போது துடைப்பத்திலிருந்து நழுவி விழும் குச்சிகளையும் சேர்த்துப் பெருக்கித் தள்ளிவிடுவதில்லை. அப்படி நழுவி விழும் குச்சிகளை எல்லாம் பெருக்கித் தள்ளிக்கொண்டே போனால் கடைசியில் துடைப்பமே மிஞ்சாமல் போய்விடும். ஆகையினால் உபயோகப்படக்கூடிய குச்சிகளை எடுத்து மீண்டும் துடைப்பத்தில் செருகிக்கொள்வதுபோல, காங்கிரஸிலிருந்து ஏதோ ஒரு காரணத்திற்காக வெளியேறியவர்கள் நல்ல உபயோகமுள்ளவர்களாயிருந்தால் அவர்களை மறுபடியும் சேர்த்துக் கொள்வதுதான் காங்கிரசுக்குப் பலம்.

 

## 103



சுதந்திரம் இல்லாத தேசம் உயிரில்லாத உடல்போல. உயிர்வாழ உணவு எப்படி அவசியமோ, அது போல் சுதந்திரமாய் வாழ தியாகம் அவசியமாகும்.

104

தீபாவளி மலர் என்பது பெண்குழந்தையைப் போல. பெண்ணுக்குத் தகப்பன் சொத்தில் பங்கு இல்லை. ஆனால் கல்யாண காலத்தில் நகைகள் ஸ்ரீதனம் ஆகியவற்றைக் கொடுத்து அனுப்புவது வழக்கம். அதைப் போலத்தான் தீபாவளி மலரை அதிக அழகு படுத்தி, பெரிதாகப் போட்டு பெண் கல்யாணத்தைப் போல் செய்யப்படுகிறது. ஆனால், வாரப்பத்திரிகை என்பது ஆண் குழந்தையைப்போல். அது வீட்டிலே நம்முடன் கடைசிவரையில் வளர்ந்து நம்முடன் இருக்க வேண்டியது.

105

உடம்பிலே அதிகப்படியான ஊளைச் சதை யிருப்பதால் நன்மையுண்டா? அது ஒரு சுமையேயாகும். அதை எப்படியாவது கரைத்து ஒழிக்கவே எவனும் முயற்சிப்பான். வீணான சுமையை சுமக்க விரும்ப மாட்டான். இன்றைக்கு பிரிட்டிஷாருக்கு, இந்தியா அதிகப்படியான ஊளைச்சதை போலவே இருக்கிறது. பெருமைக்காகக் கூட அவர்கள் இந்த ஊளைச் சதையைச் சுமக்க விரும்பவில்லை. அதனால் தான் இந்தியாவை விட்டு வெளியேறுகிறார்கள்.

 106 

சங்கீதம் வேறு, பாஷை வேறு என்பது நிச்சயமாகயிருந்த போதிலும் மனித சாரீரத்தில் வரும்போது பேச்சும் அந்த சங்கீதமும் ஒன்று யிருக்கவேண்டுமென்பது பழைய முறை; நியாயமான முறை. சங்கீதம் சோக ரசமாயிருந்து, பேச்சு ஏதோ வேறுவிஷயமாயிருந்தால் "அரிசி இவ்வளவு விலை. பருப்பு இவ்வளவு விலை" என்று தோடி ராகத்தில் பாடினால் நன்றாயிராது. பேச்சு என்று ஏற்பட்டவுடன் ராகமும் பேச்சும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இருக்க வேண்டும். எப்படி உடம்பும் ஆத்மாவும் ஒன்றுகிறதோ அப்படியே இரண்டும் ஒன்றுகப்போய் கேட்கும்போது பிரமானந்தம் உண்டாகிறது, என்று சொல்லுகிறார்கள்.

 107 

தார்மீக ஆத்மார்த்த கோட்பாடுகளின் மதிப்பு குறைவதனால் ஏற்பட்ட சீர்குலைவை தவிர்க்க சர்வ கலாசாலையைவிட சிறந்த இடம் இல்லை. பட்டைக் கண்ணாடியில் ஒரு வர்ணம் மற்றொன்றினழகை அதிகரிப்பது போல் ஒவ்வொரு மதமும் மற்றொன்றின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறது.

 108 

சங்கீதத்திற்கு மொழி வேண்டுமா, வேண்டாமா என்கிற வாதம், பிரமாதமாக இந்த இசை இயக்கத்தில் அடிபடுகிறது. மொழிபற்றி வித்தியாசம் ஏற்பட்டபடியால் மொழியே வேண்டாம் என்கிறவாதம் போட்டால், நம் கக்ஷி பலமாகப் போய்விடு கிறது என்ற உத்தேசத்தின் மேல் சங்கீதத் திற்கு மொழியே வேண்டாம் என்று சிலர் சொல்லுகிறுர்கள். இது எப்படி இருக்கிற தென்ருல் தென்கலை வேண்டுமா, வடகலை வேண்டுமா என்று கேட்டால், ஹிந்துமதமே வேண்டாம் என்பது போலவும் சிவன் கோயில் வேண்டுமா, விஷ்ணு கோயில் வேண்டுமா என்று கேட்டால் கோவிலே வேண்டாம் என்பது போலவுமிருக்கிறது.

 109 

தியாகையர் தமிழில் பாடுவதற்குப் பதில் தெலுங்கில் பாடினுர். அது ஒன்றே போதும் தமிழிசை இயக்கத்திற்கு ஆதரவு. அவர் தமிழ் நாட்டிலே வளர்ந்து தமிழ்தேசத் திலே புகழ் பெற்றவர். ஆயினும் ஏன் தெலு ங்கில்பாடினுர்? தெலுங்கு நல்லதென்று

அதில் அவர் பாடவில்லை. தெலுங்கு தாய் பாஷையானதால் அவர் அதில் பாடினர். நாமும் நம் தாய்பாஷையில் பாடினல்தான் நம் ஆத்மாவுக்கும் திருப்தி கிடைக்கும். கடவுளுக்கும் காதுகேட்கும்.

யாராவது ஒருவர் இப்போது காதலில் விழுந்தோமென்று வைத்துக்கொள்ளுங்கள். நான்தான் காதலில் விழுந்தேனென்று வைத்துக் கொள்ளுங்கள். வயது 80 என்று வைத்துக்கொள்ளுங்கள். காதல் கடிதம் எழுத வேண்டுமென்றால், நான் நல்ல இங்கிலீஷ் தெரிந்த ஒரு ஆளிடம் போய் "நீ இங்கிலீஷில் காதல் கடிதம் (Love letter) ஒன்று எழுதிக்கொடு, நான் என் காதலிக்கு அனுப்பவேண்டும். என்னல் எழுதமுடியாது, நீ எழுதித் தா. அதை நான் அனுப்பிக் காதலை வளர்த்து ஜயிக்கவேண்டும்" என்றல் அது முடியாது. இங்கிலீஷ் 'லவ் லெட்டர்' வாங்கி நான் அனுப்பினல் எவ்வளவு சிரிப்பாயிருக்கும்? அது போல்தான் தாய்மொழியில்லாத வேறு மொழியில் இசை பாடுவதும். ராமனுக்கு அல்லது கிருஷ்ணனுக்கு நான் 'லவ்லெட்டர்' அனுப்பவேண்டுமானல், என் தாய்பாஷையில் எனக்குத் தோன்றிய முறையில் எழுதி, என் அன்புக்குத் தோன்றியபடி நான் பாடவேண்டுமே தவிர இதற்காக மிக நல்ல சங்கீதம் என்றுவேறு பாஷை

யில் உள்ளதை எடுத்து அதை நான் பாடி ஞல் என்ன உணர்ச்சி எனக்கு உண்டாகும்? எனக்கு உண்டாகாவிட்டால் கடவுளுக்கும் உண்டாகாது.

 110 

முன்பு தேசியப் போராட்டம் நடந்த போது இருந்ததைக்காட்டிலும்இப்பொழுது பொதுவாக மக்களிடையே ஒழுக்கமும் உணர்ச்சியும் சீர்குலேந்திருப்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனுல் இது சகஜம். ஓர் மரம் வசந்தருது காலத்தில் அழகாக தோற்ற மளிப்பதுபோல் இலேயுதிர் காலத்தில் தோற்றமளிப்பதில்லே. பரஸ்பர மன ஒற்று மையுடன் தான் நாம் ஒழுக்கத்தையும் கட்டுப் பாட்டையும் நிர்வகிக்க வேண்டும். முன்பு நமக்கு சுதந்திரம் கிடைக்காதிருந்த போது ஓர் வண்டியில் கட்டப்பட்ட மாடு போல் நாம் அனேவரும் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டிருந்தோம். பரஸ்பரம் ஒருவருக் கொருவர் ஒத்துப்போக இப்பொழுது நாம் பழகிக் கொள்வதுதான் மிக அத்யாவசியம்.

 111 

இப்போது ஆற்றங்கரையில் இரண்டு படகுகள் காணப்படுகின்றன. ஒன்று பழைய படகு; நல்ல விசாலமான படகு. இதை மகாத்மா காந்தி ஓட்டுகிருர்.

மற்ருெருவர் புதிய படகு ஒன்றைக் கொண்டு வந்திருக்கிருர். புதிய படகுக்குப் பளபளப்பாக வர்ணம் பூசி யிருக்கிருர்கள். கொடி, தோரணம் முதலியவைகளையும் கட்டிச்சிங்காரம் செய்திருக்கிருர்கள். "என் படகில் ஏறுங்கள்!" என்று அந்தப் புதிய ஆள் கூப்பிடுகிருர்.

மகாத்மா காந்தி நல்ல அனுபவம் வாய்ந்த தோணிக்காரர். மேடு பள்ளம் இருக்குமிடங்கள் அவருக்கு நன்ருகத் தெரியும். இவைகளெல்லாவற்றையும் கடந்து அவர் ஜாக்கிரதையாக நம்மைக் கரை சேர்த்து விடுவார்.

புதுப் படகு ஓட்டைப் படகு என்று எனக்குத்தெரியும், ஆகையால், புதுப்படகில் ஏறினுல் எல்லோரும் ஆற்றில் மூழ்க வேண்டியது தான். நர்மதை நதி ரொம்ப ஆழமானது. "என் படகில் நீங்கள் ஏற முடியாதென்ருல், என் படகையும் உங்கள் படகுடன் சேர்த்துக் கட்டிக் கொள்ளுங்கள் என்று புதிய ஆள் சொல்லுகிருர். இதுவும் சாத்தியமில்லாத காரியம்தான். ஒரு ஓட்டைப் படகை நல்ல படகுடன் சேர்த்துக் கட்டிக்கொண்டு போனுல், அதற் குள் ஜலம் புகுந்து, அந்தப் பாரத்தில் நாமும்

மூழ்கி விடுவோமாதலால் அதற்கும் சம் மதிக்க முடியாது. காந்திஜீயின் படகு ஒன் றில் தான் நாம் ஏற முடியும். அவர் எவ்வளவு அனுபவம் பெற்றவர்! நமக்குத் தெரிந்து சென்ற 35 வருஷங்களாக அவர் நம்மை நடத்தி வந்திருக்கிறார். 'வானத்தை வில்லாய் வளைத்து விடுகிறோ''மென்றபெரிய வார்த்தைகளைக் கண்டு ஏமாந்துபோய் ஓட்டைப்படகில் ஏறி விடாதீர்கள். ''கொஞ்சநேரம் புதுப்படகில் ஏறிப்பார்த்து விட்டு, பிறகு பழைய படகுக்கு வந்து விடுவோ'' மென்றும் நினைக்காதீர்கள். ஏனென்றால், ஓட்டைப் படகில் ஏறினால் பிறகு திரும்பி வந்து நல்ல படகில் ஏறும் வரையில் நாம் உயிருடனிருக்கமாட்டோம். அதற்குள் ஓட்டைப் படகு கவிழ்ந்துவிடும்.

 112 

காந்திஜியின் சக்தி மின்சாரத்தைப் போன்றது. ஏதாவது ஒரு கம்பியாவது சேத மடைந்து விட்டால், 'கரெண்ட்' பூராவும் போய்விடும். காந்திஜியின் சக்தி நம்முடைய நாணயத்தையும், உண்மையையும் பொறுத் துத்தான் இருக்கிறது.

## 113

ஆற்றில் எல்லா நீர்களும் பாய்ந்து சேர வேண்டியது இயல்பு. கங்கா நதியும் கூட இந்த நியதிக்கு உட்பட்டது. ரிஷியின் பிறப்பும் ஆற்றின் பிறப்பும் ஆராய்ச்சிக்கு உட்படக்கூடாது என்பது பழைய சாஸ்திரம். அதில் பேருண்மை இருக்கிறது. அதைப் போல விரோதிகளாக இருந்தவர்கள் மறுபடியும் நமமுடன்சேர்ந்துஉறவாடுகிறார்கள் என்று பத்திரிகைகளிலும், சொற்பொழிவுகளிலும்மெதுவாகவும், கோணலாகவும், நேராகவும், எவ்விதமாகவும் எடுத்துக் காட்டுதல் உசிதம் அல்ல, சரியல்ல, அவசியமில்லை, பிரயோஜனமற்ற குறும்பாகும்.

## 114

கஷ்டங்களை தைரியத்தோடு மட்டுமின்றிமகிழ்ச்சியோடு சமாளிக்க வேண்டும். நீங்கள் அனைவரும் ராமாயணம் படித்திருப்பீர்கள். ராமர் காட்டுக்குப் போனபோது கண்ணீர் விட்டாரா? அவர் பல கஷ்டங்களை அனுபவித்தது போல் இந்தியாவின் புதல்வர்களான நீங்களும் சில கஷ்டங்களையும்,துரதிருஷ்டங்களையும் சகித்துக்கொள்ள வேண்டும். கண்ணீர் விடக்கூடாது.

 115 

மகாத்மாஜி இறந்ததை நினைத்தால் பகீர் என்கிறது. இப்படியும் நடந்ததா என்று எண்ணவே முடியாமலிருக்கிறது. கடவுள் மாதிரி வந்தார். கடவுள் மாதிரி மறைந்து விட்டார்.

உலகம் வெட்ட வெளியாகிவிட்டது. எனக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. தமிழ் மக்களுக்கு நான் எவ்விதத்தில் என்ன செய்து உதவ முடியும்! ஆண்டவன் அருள் இருந்தால் அவர்கள் உள்ளத்தில் லக்ஷ்மியும் சரஸ்வதியும் பார்வதியும் வந்து குடி கொள்ளுவார்கள். பக்தியும், புத்தியும் கருணையும் உள்ளத்தில் பொங்கும். கூட்டம் கூட்டமாகப் பிரித்துக்கொண்டு பாழான வெறுப்புகளை வளர்க்க மாட்டார்கள்.

 116 

துக்கமும் சுகமும் வடக்கு தெற்குபோல் ஒன்றுஇன்றி மற்றொன்று இல்லை. நோயின்றி நோயற்ற வாழ்வை யாரே மதிப்பார்? சிலர் தாயிழந்து துக்கப்பட்டால்தான் வேறு சிலர் தாயின் அருமையைக் காண்பார்கள்.

 117 

நாம் உண்மையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்று காந்திஜி போதித்துள்ளார். இம்மையிலும் சரி, மறுமையிலும் சரி, வேறு எந்தவழியும் நமக்கு நற்பலனை அளிக்காது. அப்படி உண்மை பேசுவதால்நமக்கு நஷ்டம் வரினும் வரட்டும்; பொய்பேசி நமக்குக் கிடைக்கக் கூடியதைவிட எத்துணையோ மடங்கு மேலான மதிப்பும் தைரியமும் நமக்கு உண்மையால் கிடைக்கிறது. உண்மையைக் கடைப்பிடித்து நிற்றலே நம்பத்தகுந்த வழி; நண்பர்களுக்குள் தலை சிறந்த நண்பன். யுதிஷ்டிரரை ஒரு நாய் பின் பற்றிச் சென்றது போலவும், அந்தநாயை யுதிஷ்டிரரும் விடாது கூட்டிச்சென்றது போலவும் நம்மை விட்டு இணைபிரியாமல் துணை நிற்பது உண்மை ஒன்றே.

 118 

இனி நாம் காந்திஜியின் மறைவுக்காக துக்கங்கொண்டாடுவதை நிறுத்திவிடவேண்டும். அவர் உயிருடன் இருக்கையில் நாம் அடைந்த அனுபவங்களையும் கற்ற

நீதிகளையும் நினைத்து மகிழ்ந்து அவருடைய ஜயந்தியைக் கொண்டாடுவோமாக. ஸ்ரீராம னுடைய ஜயந்தியையும் கிருஷ்ணனுடைய ஜயந்தியையும் நாம் கொண்டாடுகிறோம்; அந்தக் கொண்டாட்டங்களின் போது ஸ்ரீராமனும் கிருஷ்ணனும் மறைந்ததை நினைத்து விசனிக்கிறோமா? அவர்களுடைய அரிய குணாதிசயங்களை எண்ணியெண்ணி ஆனந்திக்கவில்லையா? அதுபோல, காந்தி ஜயந்தியையும் கொண்டாடுவோம்!

 119 

தத்தம் வேலையை உண்மையுடன் செய்துவரும் ஒவ்வொருவரும் காந்திஜிக்கு ஒரு நடமாடும் ஞாபகச்சின்னம் ஆவர். ஒரு ஜோடிமிதியடி செய்யக் கற்றுக்கொண் டவன் அதைச் சரிவரச் செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். ஒரு ஷர்ட்டு அல்லது கோட்டு தைக்கக் கற்றுக் கொள்பவன் அவற்றை பிழையறத் தைக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். எந்த வேலையைச் செய் தாலும் அகமகிழ்ச்சியுடன் செய்யக் கற்றுக் கொள்ளல் வேண்டும். எந்த வேலையும் நமக்கு மகிழ்ச்சியைத் தரவேண்டும்; வேலை செய்வதில் மகிழ்ச்சியை எவ்விதம்

பெறுவது, என்பதை நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். குழந்தைகளுக்குச் சோறு சமைக்கும் தாய் ஒருத்தி அச்சோற்றைக் குழந்தைகள் உண்டு மகிழுமுன் தான் அதைச் சமைத்து மகிழ்கிருள் அல்லவா!

 120 

அன்பு, எதிர்ப்பைச் சமாளிக்க வல்லது என்று காந்திஜி நமக்குக் கூறியுள்ளார். தீமைக்கு எதிராகத் தீமை புரிவதால், மனித சமூகத்துக்கே பாதகம் விளையும். மனித சமூகத்தின் துன்பங்களை அதிகப்படுத்துவது தவிர, அதனுல் தீமை இயற்றினவனுக்காவது ஏனையோர்க்காவது சுகம் ஏதும் உண்டாவதில்லை. அன்பு ஆண்டவனுடைய படைக்கலம். வெறுப்பு ஓர் பெருநோய். நம்மைப் பீடிக்கும் வெறுப்புணர்ச்சியை, அன்புணர்ச்சி சந்தடியில்லாமல் நிலையாக அகற்றிவிடவல்லது.

 121 

மாட்டுக்குப்பின் கன்று காட்டுக்குப் போனுல்தான் நல்லது. தனியாகப் போனுல், புலி கன்றைக் கொன்று விடும். அதேபோல் தேசத்தலைவர்கள் சொல்வதுபோல் கட்டுப்பாடுடன் மக்கள் நடக்கவேண்டும்.

 122 

வீட்டில் விரித்திருக்கும் ரத்ன கம்பளத்தில் ஒரு பொத்தல் இருந்தால், நல்ல வேலைக்காரன் அதன் மேல் தன்மேல் வஸ்திரத்தைப் போட்டு, விருந்தாளியாக வந்தவர்கள் கண்ணுக்கு அப்பொத்தல் படாதவாறு மூடிவிடுகிறான். மூட வேலைக்காரனோ நாலு பேர் முன்னால் அந்தப் பொத்தலைப் பற்றிக் கூப்பாடு போட்டு அதைப் பார்க்காதவர்களும் பார்க்கும்படி பண்ணுகிறான். இது ஓர் பாரஸீகப் பழமொழியின் கருத்து. மனிதர்கள் குறை உள்ளவர்கள். காங்கிரஸிலும் மனிதர்கள் தான் இருப்பதால் சில சமயம் தவறு நேர்தல் சகஜமே. காங்கிரஸ் அபிமானிகளில் சிலர் அந்தத் தவறுகளைப் பெரிது பண்ணாமல் சீர்திருத்த முயல்வார்கள். வேறு சிலரோ அவைகளைப் பெரிது பண்ணி அந்தச் சந்தர்ப்பத்தில் தங்கள் சொந்த விருப்பு வெறுப்புகளைக் காட்டுவார்கள்.

 123 

நமது சமூக ஆசாரங்களிலும், பழக்க வழக்கங்களிலும் எவ்வளவோ தீமையான அம்சங்கள் இப்போது இருக்கின்றன. அவைகளை மாற்ற வேண்டியதுதான். ஆனால்

அதற்காக அந்த ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திய நமது முன்னோர்களை நாம் திட்டவேண்டியதில்லை. அந்தக் காலத்தில் அவைகளுக்கு ஏதோ உபயோகமிருந்திருக்கலாம். நமக்குத் தெரியாதபடியால் அவர்களை மூடர்கள் என்று சொல்லக் கூடாது. உதாரணமாக:—

மரங்களுக்கு மேலேபட்டை இருக்கிறது. மரங்கள் ஜீவித்திருப்பதற்கும் வளர்வதற்கும் அந்தப்பட்டை மிகவும் அவசியம். ஆனால் மரம் முதிர்ச்சியடைந்து வெட்டிய பிறகு, கட்டிட வேலைகளுக்கு உபயோகப் படுத்தும் போது, தச்சன் முதலில் பட்டையைத்தான் செதுக்கி யெறிகிறான். அப்போது அப்பட்டைக்கு எவ்வித உபயோகமுமில்லை. அதனால் மரத்துக்குப் பட்டையே வேண்டியதில்லை யென்று சொல்லிவிடலாமா? பட்டையில்லாமலே மரத்தை வளர்த்திருக்க வேண்டும் என்று அந்தத் தச்சன் மரம் வளர்த்தவனைத் திட்டினால், அவனை மூடன் என்று சொல்லமாட்டோமா?

 124 

சமூக சீர்திருத்தத்துக்கு அன்புவழிதான் சிறந்தது. துவேஷப் பிரசாரத்தினால்தான் விரைவில் பலன் ஏற்படுவது போலவும், அன்பு வழியினால் பலன் அதிகமில்லை போலவும், காலதாமதம் போலவும் காணப் படலாம். அது பொய்த் தோற்றம்.

கட்டை வண்டியில் போகும்போது ஆட்டமும் அசைவும் அசாத்தியமாக யிருக்கிறது. தலையிலும் முதுகிலும் அடி கூடப் படுகிறது. எலும்புகள் நொறுங்குகின்றன. ஆனால் உயர்தர மோட்டார் வண்டியில் போகையில் உடம்பே அசங்குவதில்லை. இதிலிருந்து கட்டை வண்டிதான் வேகம், மோட்டார் மெதுவு என்று யாராவது சொல் வார்களா? எவ்வளவு ஆட்டினாலும் கட்டை வண்டி மணிக்கு மூன்று மைல்தான்; மோட்டார் அசங்காமல் போனாலும் மணிக்கு நாற்பது மைல் போகிறது. இது போல் துவேஷப் பிரசாரத்தில் ஆர்ப்பாட்டமும் தடபுடலும் அதிகமாயிருக்கலாம். ஆனால் அன்பு வழிதான் உண்மையில் சுருக்கு வழியாகும்.

 125 

தேசியக் கொடியை சுமார் இருபது வருஷங்களுக்கு முன்பு மௌலானா முகமத்அலியும், ஷவுக்கத் அலியும், மகாத்மா காந்தியும் கூடி தொழில்களைக் காரணமாகக் கொண்டு ஏற்படுத்தினார்கள். இதில் மத சம்பந்தமே கிடையாது. யாராவது அதை வேண்டாமென்றால் அடித்து வற்புறுத்தக் கூடாது. வற்புறுத்தினால்வெறுப்பு ஏற்பட்டு துவேஷம் அதிகமாகும். ஒரு குழந்தையிடம்

தினந்தோறும் ஒரு அடி அடித்து ஒரு பிடி சர்க்கரை கொடுத்து வந்தால், நாளடைவில் குழந்தை, அடியும் வேண்டாம் சர்க்கரையும் வேண்டாம் என்று சொல்லிவிடும். அடி பட்டு இனிப்பு பெற்றுக்கொள்ள குழந்தை விரும்பாது. ஆகையால் வேண்டாம் என்பவர்களிடம் அதைக் காட்டவும் வேண்டாம் என்று காந்தியடிகள் சொல்கிறார்.

 **126** 

பாரதியார் பாடல்களைப் பள்ளிக் கூடங்களில் எதற்காகக் கட்டாயப் பாடமாய் வைக்கவேண்டும்? அதற்கு அவசியமே யில்லை. தாய்ப்பாலை யாராவது பாலோடை யால் ஊட்டுகிறார்களா? குழந்தை தானாக அந்தப் பாலைச் சாப்பிடுமே!

 **127** 

அழகு என்றால் என்ன? மனதில் உள்ளதை உள்ளபடியே கூறுவதுதான் அழகு. அதற்கு மேலும் அழகு செய்வது முடியாது. புஷ்பச் செடிகள் தாமாகவே பூத்து புஷ்பிக்கின்றன. பலவிதமான புஷ் பங்கள் இருக்கின்றன. இவைகளுக்கு வர்ணம் தீட்டி, திட்டம் போட்டெல்லாம் யாரும் புஷ்பிக்க வைக்கவில்லை. இது பூஞ்

செடியின் தர்மம். அதேபோல் மனிதர்களும் சுபாவமாக, கோர்வையாக சிந்தனை செய்து, மனதில் உள்ளதை உள்ளபடி எடுத்துக் கூறுவதுதான் அழகு, தர்மம்.

 128 

குடிகளுக்கு ஜமீன்தாரிடம், புலி சிறுத்தைகளிடம் இருப்பதைப்போல, பயம் கூடாது. ஊரைப்பாதுகாக்கும் தலைவரே ஜமீன்தார். புலிக்குத்தான் ஆளைக்கண்டால், பயம். மாடுகள் ஆளைக் கண்டு பயப்படுவதில்லை. அது போல் நல்ல ஜமீன்தார்கள், குடிகளைக் கண்டு பயப்பட மாட்டார்கள். அதைப்போலவே எல்லா ஜமீன்தார்களும் இருக்கவேண்டும்.

 129 

கிராமாந்திரங்களில் ஜனங்கள் நல்ல ஜலம் எது? குடிக்க எது நல்லது? குளிக்க எது நல்லது? என்று கூட, பிராம்மணர் வீட்டுக் கன்றுக்குட்டிக்கு பாலின் ருசி தெரியாதது போல், தெரியாமலிருக்கிறார்கள்.

 130 

ஆண்கள் பறக்கும் பக்ஷிகளைப் போல. அவர்கள் என்ன வேணுமானுலும் லகுவில் செய்து விடலாம். ஆனால் பெண்கள் அப்படியல்ல. நன்ருய் வேரூன்றிய மரத்துக்குச் சமமானவர்கள். மரத்தை வேரோடு பிடுங்குவது கஷ்டமல்லவா? அதுபோல் எல்லா பந்தங்களையும் அறுத்துக்கொண்டு பெண்கள் வெளிக் கிளம்புவது சற்று கடினமே.

 131 

கெடியாரம் ஓடுவதற்காக நாம் அவ்வப்போது சாவி கொடுக்கிருேமல்லவா? அதைப் போலவே உலகம் நன்ருக நடைபெறுவதற்காக பகவான் உலகில் அவ்வப்போது அவதாரமெடுக்கிருர். மகாத்மா காந்தி அத்தைய அவதார மூர்த்தியே.

132

 

காந்தியடிகளின் கட்டளைக்கு கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்ருல், மற்ற தலைவர்களை மட்டப்படுத்தி விட்டதாகாது. ஹிமயமலைதான் பெரியமலை என்ருல், இதனுல் நீலகிரி அல்லது திருச்செங்கோடு மலை ஆகியவை அவமானப்படுத்தப் பட்டதாகக் கருதக் கூடாது.

ஏதோ ஒரு உடனடியான நோக்கத்தை சாதித்துக்கொள்ளும் பொருட்டு தொழிற் சாலைகளிலும் போக்கு வரத்து சாதனங்களி லும் நாச வேலை செய்தால் நமது ஜனநாயக சுதந்திர இந்தியா பந்தோபஸ்தாகவும் சுபிட் சமாகவும் வலிமையுள்ளதாகவும் வாழமுடி யாது. அடைய விரும்பும் லட்சியம் நல்லதா யிருக்கலாம்; ஆனால் அந்த லட்சியத்தை அடைய அவசரமாகவும் குறுகிய நோக்குடன் காரியம் செய்தால் அரசாங்கத்துக்கும் சமூ கத்துக்கும் பெரிய தீங்கு விளையும். ரோடு கள், பாலங்கள், இதரபோக்கு வரத்து சாத னங்கள் விவசாயப் பொருள் அல்லது, இதர பொருள்களின் உற்பத்திசாதனங்கள் ஆகிய வைகளிடத்து நாம் 'வணக்கம்' காட்ட வேண் டும். 'வணக்கம்' என்ற பெரிய வார்த்தையை உபயோகிப்பதுதான் பொருத்தமாயிருக் கிறது. அதைவிட சிறிய வார்த்தை அவ்வளவு பொருத்தமல்ல. ஒரு உயிர் பிராணியை கொல்லும்பொழுது நமக்கு உடம்பில் அச் சம் தோன்றுவது போலவே அந்த சாதனங் களை நாசம் செய்வதில் நமக்கு இயற்கை யாகவே அச்சம் தோன்ற வேண்டும் இத்

தகைய மனப் பான்மை ஏற்பட்டு விட்டால் நவீன சமூகமானது உயிர் பிழைக்க முடியாது. நமது மதங்களிடம் நமக்கு எந்த அளவு மரியாதை இருக்கிறதோ அதே அளவுக்கு போக்கு வரத்து சாதனங்களிலும் உற்பத்தி சாதனங்களிலும் மரியாதை ஏற்பட வேண்டும்.

 **134** 

சாக்வீக சட்ட மறுப்பு நடத்தியதால் சில விளைவுகள் ஏற்பட்டுள்ளன. வியாதியை குணப்படுத்த மருந்து சாப்பிடுகிறோம். வியாதி குணமடைந்து விடுகிறது. ஆனால் மருந்தின் சில பாகங்கள் உடம்பில் சில சமயம் தங்கி விடுகிறது. அந்தப் பாகங்களை போக்கி சில கட்டுப்பாடுகளை அனுஷ்டிக்க வேண்டியிருக்கிறது. அதே போல அரசியலும். அடிமை வாழ்வை போக்க கையாண்ட சில முறைகள் சில கெட்ட விளைவுகளையும் ஏற்படுத்தியுள்ளன. அந்தக் கெட்ட விளைவுகளை போக்குவதில் கட்டுப்பாடும், விடா முயற்சியும் தேவை.

 **135** 

நமது முன்னோர்களின் விசாலமான கொள்கைகளையும் பெரிய சித்தாந்தங்களை

யும் பாதுகாப்பதில் நாம் குறுகிய புத்தியுள்ள வர்களாகவும் மதப் பித்து பிடித்தவர்களாக வும் ஆகிவிட்டோம். தர்ம சிந்தனையைக் காப்பாற்றும் பொருட்டு நாம் கருமிகளாக இருக்கவேண்டுமென்று ஒருவர் சொன்னால் அது எவ்வளவு அபத்தமாக இருக்கும்? அதேபோல்தான் முன்னோர்களின் பரந்த சித்தாந்தங்களை பாதுகாக்க நாம் குறுகிய புத்தியுள்ளவர்களாக இருக்கவேண்டு மென்று சொல்வதும் இருக்கும்.

 136 

சங்கீதம் வேறு, மொழி வேறு என்பது நிச்சயம். பாத்திரம் வேறு, ஜலம் வேறு என்பது நிச்சயம். ஆனால் நான் ஒரு டம்ளர் பால் சாப்பிடுகிறேன் என்றால் பாலையும் டம்ளரையும் சேர்த்துச் சாப்பிடுவதில்லை. பால் மட்டும்தான் சாப்பிடுகிறேன். டம்ளர் இல்லாமலும் சாப்பிடலாம். அதாவது கன்றுக்குட்டி முதலியவைகள் டம்ளர் இல்லாமலும் குடிக்கும். டம்ளரில் போட்டுக் காப்பியோ, பாலோ சாப்பிடுவதும் உண்டு, எப்படிச் சாப்பிட்டாலும் உண்மையில் குடிப்பது பால்தான். சங்கீதம் தான் கேட் கிறேன். மனிதன் மொழிகளுடன் சேர்த்துக் கேட்கும்போது ஒரு தனி சந்தோஷம் உண்டாகிறது.

 137 

ஒரு நாட்டில் பொதுவுடமை ஸ்தாபிக் கப்படுவதாக வைத்துக் கொள்ளலாம். என் ருலும், பக்கத்து நாட்டில் இன்னும் முத லாளி ஆதிக்கமே இருந்துவருமானுல், பொது உடமை ஸ்தாபிதமான நாட்டில்கூட அதன் பூரண பலனையும் அடைந்துவிட முடியாது. இதைக்கொண்டு பொது உடமையே பய னில்லையென்று நீங்கள் அபிப்பிராயப்பட்டு விடக்கூடாது. உங்கள் வீட்டை நீங்கள் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனுல் அடுத்த வீட்டுக்காரன் தன் மனையை சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. இதனுல், ஆகாயம் அசுத்தப்படுகிறது. அதைக்கொண்டு, உங்கள் வீட்டைச் சுத்த மாக வைத்துக்கொள்ளுவதாலும் பயனில்லை என்று நீங்கள் நினைப்பீர்களா? மாட்டீர் களல்லவா? உங்கள் சுத்த உணர்ச்சி அண்டை அயல் வீட்டாரிடமும் பரவும் வரையில் நீங்கள் உழைத்துக்கொண்டே யிருக்கவேண்டும்.

 138 

பொது உடமை ராஜ்யத்தில் "இது என் வீடு; இது என் பணம்; இது என் மகன்

அல்லது பேரனுக்குப் போய்ச் சேரும்" என்றெல்லாம் நீங்கள் சொல்லக்கூடிய சாமான்கள் இருக்கமாட்டா. "இது என்னுடையது" அல்லது "இது உன்னுடையது" என்ற பேச்சே பொது உடமை ஆட்சியில் கிடையாது. இப்படிப்பட்ட நிலைமை எப்படி இருக்க முடியும் என்றுதான் இப்பொழுது தோன்றும். ஏனென்றால், சொத்துரிமை எண்ணத்திலேயே நாம் வளர்ந்து ஊறிக் கிடக்கிறோம். ஆகையால், தனிமனிதனுக்குச் சொத்தே இல்லாத உலகத்தை நாம் உருவகம் செய்து பார்க்க இயலாமற் போகிறது தண்ணீரை உதாரணமாக எடுத்துக் கொள்ளுவோம். நாம் சாதாரணமாக எவ்வளவு தண்ணீரையாவது எடுத்துச் சேமித்து நமக்குச் சொந்தமென்று பூட்டி வைப்பதில்லை. ஒவ்வொருவரும் தன் தனக்குத் தேவையான தண்ணீரை, எடுத்து தனது தற்பொழுதைய உபயோகத்துக்கு மட்டில் வைத்துக் கொள்ளுகிறார்கள். தண்ணீர் விஷயத்தில் கவலையோ பேராசையோ உண்டாவதில்லை. ஒரு நதி அல்லது ஏரியின்பாகத்தையாவது தனி மனிதர்களுக்குச் சொந்தமான சொத்தாகப் பெரும்பாலும் ஒதுக்கி வைப்பது கிடையாது. நதியும் ஏரியும் யாவருக்கும் உபயோகமாகின்றன; யாவருக்கும் பொதுவாக நிர்வகிக்கப்படுகின்றன.

இதே கொள்கையை இதர சொத்துக்கள் மீதும் பிரயோகித்துப்பார்த்தோமானால் பொது உடைமைத் தத்துவத்தைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ளலாம்,

 139 

"மனிதனுடைய உழைப்பால் விளையும் தானியங்களும், உணவுப் பொருள்களும் இருக்கின்றனவே; இவற்றின் தன்மை வேறுவிதமானது. இவை போன்றவற்றில் தனி மனிதனிக்குச் சொத்துரிமை அவசியமாக இருக்கிறது" என்று நீங்கள் நினைக்கக் கூடும். ஆனால், உண்மையில் அப்படியொன்றும் வித்தியாசம் கிடையாது. தபால்போக்குவரத்து ஊழியம் ஒரே மொத்தமாக சமூகம் பூராவுக்கும் பொதுவாய், நடைபெறுகிறது. ஒவ்வொரு மனிதன் கடிதமும் அவனவனிடம் போய்ச் சேருகிறது. இவ்வேலையை ஜன சமூகம் முழுவதும் சேர்ந்து செய்யவில்லையா? இவ்வாரே மனிதர்களின் ஏனைய தேவைகளையும், எல்லார் நன்மைகளுக்கும் ஒத்த முறையில் கூட்டுறவோடு பூர்த்தி செய்து கொள்ள முடியும்.

 140 

தபால் இலாகா, வீதி விளக்கு, நகர சுகாதாரம், வீட்டு வேலைகளுக்கு மின்சார சப்ளை, ஆகிய இவையெல்லாம் கூட்டுறவு

கொண்ட தேசீய ஏற்பாடுகளேயாகும். பொது உடைமை சாத்திய மென்பதற்கு இவை பிரத்தியட்ச உதாரணங்களாய் விளங்குகின்றன. தனக்கு வயிற்றுவலி யில்லா திருந்தபோதும் வயிற்றுவலி மருந்தை ஒரு மனிதன் தன் சொந்தப் பெட்டியில் பத்திரமாய் பூட்டிவைத்த காலமுமிருந்து வந்தது என்பது வாஸ்தவந்தான். ஆனால், இன்றோ வயிற்றுவலி மருந்து ஆஸ்பத்திரியில் இருக்கிறது. வலியுள்ளவன் அதை உப யோகித்துக் கொள்ளலாம்; வலி இல்லாத வன் அதை உபயோகித்துக் கொள்ள உரிமை கிடையாது.

 141 

நாடகம், சங்கீதம், சினிமா முதலிய சகல களியாட்டங்களையும், எல்லாரும் அனுபவிக்கக் கூடியவையாக, பொதுஉடமை ரீதியில் நடத்தலாம். திருப்பதி மலை இருக்கிறது. அது எந்தத் தனி மனி தருக்காவது சொந்தமா யிருக்கிறதா? அங்கே போகும் சகல யாத்திரிகரும்தான் அதன் காட்சி யானந்தத்தை அனுபவிக் கிறார்கள். தாஜ்மஹால் காட்சியையும் எல்லாரும் அனுபவிக்கலாம்; எவரும் தன்னுடைய சொத்து என்று அதில் பாத் தியம் கொண்டாடவில்லை. இதே மாதிரியே, சகலமான சௌந்தரியக் காட்சிகளையும்

எல்லாம் ஐக்கியமாய் அனுபவித்து இன்புறும் வண்ணம், பொதுவில் நிர்வகிக்க முடியும்; அது சாத்தியமேயாகும்.

 142 

ஆறெல்லாம் கரை புரண்டு தண்ணீர் வெள்ளமாய் ஓடுகையில், கொஞ்சம் ஜலத்தை எடுத்துவந்து வீட்டுக்குள் பூட்டி வைத்துக் கொள்ளுவீர்களோ? மாட்டீர்களல்லவா? இதேமாதிரி, எல்லாசொத்தும் தண்ணிரைப் போலவே எல்லாருக்கும் சொந்தமான பொது உடைமையாகி விடும்போது, யாரும் திருடமாட்டார்கள்; பொதுச் சொத்தைத் தஸ்கரம் செய்து தனியாய்ச்சொந்தத்துக்குச் சேர்த்து வைக்கவும் மாட்டார்கள். ஏராளமான தண்ணீர் இருக்கும்போது, அதை யாராவது திருடிச்சேர்த்து வைப்பதுண்டோ?

 143 

புதிய முயற்சியில், பல தவறுகளும், பிசகுகளும் ஏற்பட்டு, கடைசியில் நமது இலட்சியம் கைகூடும் வழி, நமக்கு முக்கியமல்ல; பலன்தான் முக்கியம். ஒரு வியாதியைச் சொஸ்தம் செய்துகொள்வதற்கு மருந்தை வாயால் சாப்பிட்டு, வயிற்றுக்குள் செலுத்தலாம்; அல்லது ஊசி மூலம் குத்தித்

தேகத்தில் செலுத்தி விடலாம். இந்த இரண்டையும் விட்டு, தேகத்தில் வியாதி உண்டான பாகத்தை வெட்டியெறிந்து ரணசிகிச்சையும் செய்து கொள்ளலாம். இவையெல்லாம் ஒரே பலனை அடைவதற்கான பல வழிகள். இந்தப் பரீக்ஷைகளெல்லாம் சில சமயம் உயிருக்கே ஆபத்து உண்டாக்கக் கூடும்; அல்லது நோயைக் கடுமையாக்கி விடவுங் கூடும். என்றாலும், நம் பரிட்சைகளைச் செய்துகொண்டேதான் போகவேண்டும்; ஒவ்வொரு தோல்வியைக்கொண்டும், புதிய படிப்பினை பெறவேண்டும்.

 144 

பொது உடைமையில் நிலம் அந்தந்த விவசாயிகளுக்குச் சொந்தமான சொத்தாயிருக்காது. பம்பாயில் ஒரு ஜோரான ஆலை இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அதன் சொந்தக்காரர்கள் அதை தேசத்துக்குக் கொடுத்துவிடுகிறார்கள் என்றும் வைத்துக் கொள்வோம். அதனால் என்ன? அந்த ஆலையால் கிடைத்த லாபத்தை அதன் அத்தியட்சகர்களும், மானேஜர்களும் பங்குபிரித்துக் கொண்டது போய், தேசம் முழுவதற்கும் அது வந்து சேரும். அவ்வளவுதானே ஒழிய, தேசத்திலுள்ள சகல பிரஜைகளுக்கும்,

அந்த ஆலயையே, ஒருவருக்கு ஓர் ஆணி, இன்னொருவனுக்கு ஒரு சக்கரம், மற்றொருவருக்கு ஒரு கம்பி இவ்வாறு பிரித்துக் கொடுத்து விடுவார்கள் என்று அர்த்தமல்ல. ஓர் ஆலயைக் கோர்ட்டார் ஜப்தி செய்து விட்டால் என்ன நடக்கிறது? கடன்காரர்கள் சார்பாக நிர்வாகம் செய்கிறார்கள். அவ்வளவுதானே யொழிய, ஆலயில் எவ்வித வித்தியாசமும் ஏற்பட்டு விடாது.

 145 

பொது உடைமை ராஜ்யத்தில், தந்தையின் வசமுள்ள சொத்து தனக்குக் கிடைத்துவிடும் என்று, மகன் வார்சு பாத்தியம் கொண்டாட முடியாது. நான் ஒரு பொக்கிஷ உத்தியோகஸ்தனாகவோ, கோயில் தர்ம கர்த்தாவாகவோ, தாசில்தாராகவோ இருக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். நான் நிர்வகிக்கும் பணம் தனக்குக் கிடைக்கும் என்று என் மகன் எண்ணிவிட முடியுமோ? முடியாதல்லவா? ஆனால், தன் தந்தைக்குச் சொந்த சொத்து இருக்குமானால் அது கொஞ்ச காலத்துக்குப் பிறகு தனக்கே கிடைக்கப் போகிறதென்று மகன் நாவில் ஜலம் சொட்ட ஆசையோடு காத்துக்கொண்டிருக்கிறான். பொது உடைமை ராஜ்யத்தில்

இந்தச் சங்கதி நடவாது. ஏனென்றால் அதில் தேசத்தின் சகல சொத்தும், தேசமுழுவதற்கும் சொந்தமான தர்ம சொத்தாகப் பாவித்தே நிர்வகிக்கப்படும்.

 146 

நீர் ஒரு சித்திரக்காரர் என்று வைத்துக் கொள்ளும். நீர் வரையும் சித்திரம் உம்முடைய மகனுக்கோ பேரனுக்கோ போய்ச் சேராமல், தேசத்துக்கே சொந்தமாகப் போகிறது என்று நினைத்துக் கொள்ளும். நீர் நன்றாய்த்தானே எழுதுவீர். நீர் உமக்கு ஒரு வீடும், தேசத்துக்கு ஒரு கோயிலும் கட்டுவதாக வைத்துக்கொள்ளும். நீர் எதில் அதிகக் கவனம் செலுத்துவீர்? எதை அதிக அழகு படுத்த முயற்சிப்பீர்? வீட்டையா, கோயிலையா? கோயிலைத்தானே அதிக கவனம் செலுத்தி, அழகு படுத்துவீர், தனி மனிதர்களுக்கே சொத்துரிமையுள்ள இந்தக் காலத்திலுங்கூட, தங்கள் சொந்தக் காரியங்களைவிடப் பொதுக்காரியங்களையே அதிகக் கவனத்துடன் செய்யும் அநேக நண்பர்களை எனக்குத் தெரியும். ஆகையால் சொத்தெல்லாம் பொது உடமையாகிவிட்டால், அது நன்றாய் நிர்வகிக்கப் பெறுதோ என்று நீங்கள் அஞ்சவேண்டிய அவசியமில்லை.

எல்லாச் சொத்தும் தேசத்தின் பொது உடைமையாகிவிட்டால், அவற்றின் பரிபாலனத்தில் கவனக் குறைவு உண்டாகி விடாது என்பது நிச்சயம். சிறையில் எனக்கு மாத்திரம் நான் கீரை சமைத்துக் கொள்ளவேண்டியிருந்தால், அப்படியே ஜலத்தில் வேகவைத்து, இரண்டு உப்பை அள்ளிப்போட்டு, என்னவோ காரியத்தை ஒப்பேற்றி விடுவது வழக்கம். ஆனால், ஒரு பெரிய விருந்துக்குச் சில பதார்த்தங்கள் தயாரிக்க வேண்டுமென்று கிருஷ்ணனிடம் சொன்னால், அவன் ஏராளமாய்நெய்வேண்டுமென்பான்; இன்னும் என்னென்னவோ கேட்பான்; உண்டி வகைகளை ரொம்ப ருசியாயும் ரம்யமாயும்செய்யவேண்டுமென்பதே அவன் விருப்பம். இத்தனையும் செய்கிறானே, கடைசியில் தன் பங்கைச் சரியாய் எடுத்துக் கொள்வானோ? அதுதான் கிடையாது; அடியில் ஏதாவது மிச்சம் மீதி ஒட்டிக் கொண்டிருந்தால், அதை எடுத்துக்கொண்டு பரம சந்தோஷமடைந்துவிடுவான். ஆதலால் சொத்துக்களைத் தேசம் முழுவதற்கும் பொதுவாகச்செய்துவிடுவதால், வேறுஎன்ன சிரமங்கள் ஏற்பட்டாலும் சரிதான்; நிர்வாகத்தில் அசிரத்தை ஏற்பட்டுப் பாழாய்

விடும் என்று மனத்தில் கொஞ்சங்கூட நாம் நினைக்க வேண்டியதில்லை.

 148 

தித்திப்புப் பட்சணங்களைச் சாப்பிடும் போது சிறிது காரமும் சேர்த்துக் கொண்டால் தான் அதிகமான தித்திப்புப் பட்சணங்களைச் சாப்பிட முடியும். அதுபோல, ஜனங்கள் தங்களுடைய வாழ்க்கையில் சந்தோஷத்தோடு சிறிது கஷ்டத்தையும் அனுபவித்தால் தான் அதிகமான சந்தோஷத்தை அடைய முடியும்.

 149 

பட்டுக்குடை பார்ப்பதற்கு மிக அழகாயிருக்கும். ஆனால் அது மழைக்கும் வெய்யிலுக்கும் பயன் படாது. அதுபோல் சிலர் காங்கிரசுக்கு எதிராகச் சொல்லும் வாதங்கள் கேட்பதற்கு அழகாக இருக்கலாம். காரியத்துக்கு உதவாது.

 150 

கவர்னர் பதவியென்பது சுலபமான வேலையல்ல. இழுத்துப் பிடித்துக் கட்டப் பட்ட ஒற்றைக் கயிற்றில் நடந்து நடனமாடுவது போன்றது அதன் வேலை.

151

தரையில் வாழும் மிருகம்—மனிதனைத் தான் எடுத்துக் கொள்வோமே—தண்ணீரில் வாழும் மீனின் ஜீவியம் எப்படி நடக்கிறது என்று விளங்கிக் கொள்வது கஷ்டமேயல்லவா? பொது உடமை விஷயத்தை மனிதன் அறிந்து கொள்ளுவதும் இதே மாதிரிதான் கஷ்டமாயிருக்கிறது. ஸ்நானம் செய்வதற்கோ, நீச்சல் போட்டிக்காகவோ தான் தண்ணீரில் இறங்கலாமென்று நினைக்கிறான் மனிதன்; ஆனால் மறுபடியும், தான் தரைக்கு வந்தால்தான் அவனுக்கு நிம்மதியாயிருக்கும். ஆனால், மனிதன் மீனாகவே மாறிவிட்டால், தரையில் இப்பொழுது எப்படி வசிக்கிறானோ அப்படியே தண்ணீரிலும் சௌக்கியமாக வாழ ஆரம்பித்துவிடுவான்.

152

காங்கிரஸ் மாகாண ஆட்சிப்பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவதற்குக் கவர்னரின் விசேஷாதிகாரத்தை ரத்து செய்ய வேண்டும். சர்க்கார் காங்கிரஸைப் பார்த்து, "வண்டி தயார்; குதிரைகள் பூட்டியிருக்கின்றன. நீங்கள் ஏறி உட்கார்ந்து லகானைக் கையில் பிடித்து இஷ்டப்படி ஓட்டிச் செல்

லுங்கள். எங்களுக்கு ஆட்சேபனை யில்லை'' என்று சொல்லுகிறது. ஆனால் குதிரை களின் கால்களில் கயிறுகட்டி யிருப்பதும் அந் தக் கயிற்றின் நுனி கவர்னர் கையிலிருப்ப தும் காங்கிரஸ்காரர்களுக்குத் தெரியாமல் இல்லை. இது எதற்காக? நாம் குதிரையை வேகமாகத் தட்டி ஓட்டிக்கொண்டுபோகும் பொழுது ஒரு சாதாரணச் சொடுக்கில் அவர் கள் நம்மைத் தலை குப்புற விழும்படி செய்து விடலாம் அல்லவா? இம்மாதிரி நிலைமையில் நாம் அந்தக் குதிரை வண்டியில் எப்படிச் சவாரி செய்ய முடியும்?

 153 

தனி மனிதர்களுக்கு சொத்துரிமை உண்டு என்ற தத்துவத்தை அஸ்திவார மாகக் கொண்டே, தற்போதைய ஜன சமூக வாழ்க்கை அமைந்திருக்கிறது. தனி மனிதர் சொத்துரிமை எண்ணம் நம் நாடி நரம்பு களில் ஊறிப் போயிருக்கிறது. இந்த எண் ணத்தை வேரோடு கல்லி யெறிய வேண்டும். அது மிகவும் சங்கடமான வேலைதான்; மயக்க மருந்து கொடுக்காமல் செய்யும் ரண சிகிச்சை 'ஆப்ரேஷ'னைவிட அதிக வருத்த மான வேலை. இந்த ஆப்ரேஷனை நோவெடுக் காமல் செய்து முடிப்பதெப்படி?

